● For private circulation only

Book Post

www.tchsportal.co.in



# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

● டிசம்பர் 2020 ● இதழ் 7



## இருளில் இருந்து ஒளியினிடத்திற்கு



## அரிய தமிழ் வேதாகமங்களின் தகவல்கள்

## ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் அன்பார்ந்த கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் பத்திரிக்கையின் வாசகர்கள், எழுத்தாளர்கள் மற்றும் விளம்பரதாரர்கள் அனைவருக்கும் அன்பின் வாழ்த்துக்கள்.

அட்வெந்து நாட்கள் என்பது இயேசுகிறிஸ்துவின் முதலாம் வருகையைக் குறிக்கிறது. அறியாமை என்னும் இருளில் வாழ்ந்துகொண்டிருந்த இந்த உலகை ஒளியாகிய இயேசுகிறிஸ்து சந்தித்த திருநாளை நினைவுகூறும் நாட்கள் இந்த அட்வெந்து நாட்கள். ஒளியாகிய கிறிஸ்து இந்த உலகை சந்தித்த நோக்கம் லூக்கா 1:78,79ல் கூறப்பட்டுள்ளது. ‘அந்தகாரத்திலும் மரண இருளிலும், உட்கார்ந்திருக்கிறவர்களுக்கு வெளிச்சம் தரவும், நம்முடைய கால்களைச் சமாதானத்தின் வழியிலே நடத்தவும், அவ்விரக்கத்தினாலே உன்னதத்திலிருந்து தோன்றிய அருணோதயம் நம்மைச் சந்தித்திருக்கிறது‘. இருளில் இருக்கிறவர்களுக்கு வெளிச்சம் கொடுக்கவும், இந்த உலகத்தை சமாதானத்தின் வழியில் நடத்தவும் இயேசுகிறிஸ்து மனிதனாக இந்த உலகத்திற்கு வந்து, தன்னுடைய ஒளியை கிறிஸ்தவர்களாகிய நமக்கு கொடுத்திருக்கிறார். இருளிலிருந்து ஒளியினிடத்திற்கு வரவழைக்கப்பட்ட ஒவ்வொருவரும் தான் பெற்ற ஒளியை இருளிலிருக்கும் மற்ற ஜனங்களுக்கு கொடுக்க வேண்டும் என்பது இயேசு கிறிஸ்து கொடுத்த கட்டளையாக இருக்கின்றது. இந்த கட்டளையை நிறைவேற்றும்படியாக மிஷனெரிகள் இந்தியாவிற்கு வந்து, தாங்கள் பெற்ற சமாதானத்தையும், ஒளியையும் நமக்கு அறிமுகப்படுத்தினார்கள். அன்று மிஷனெரிகள் செய்த ஊழியத்தை இன்று நாம் செய்யவேண்டியது அவசியம். இயேசு கிறிஸ்துவின் முதலாம் வருகையை ஆசரிக்கின்ற நாம், அவருடைய இரண்டாம் வருகையில் தலைகுனிந்து போகாதபடி, சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தை அறிவியுங்கள் என்ற கிறிஸ்துவின் கட்டளையை நிறைவேற்றுவது நமது கடமை. புறஜாதி மக்களுக்கு நாம் ஒளியைக் கொடுக்கவேண்டும் என்றால், முதலாவது அந்த ஒளியும், சமாதானமும் நம்மில் நிலைத்திருக்க வேண்டும். இயேசுகிறிஸ்து வைத்துப்போயிருக்கின்ற சமாதானமும், சந்தோஷம் நம்மில் நிறைந்து, மற்றவர்களிடத்திற்கும் பரவட்டும். ஜனவரி மாத ஆய்விதளுக்கான தலைப்பு புதிய வருடம், புதிய விடியல், புதிய தேடல். உங்களின் வரலாற்றுத் தொகுப்புகளை எழுதி 15ம் தேதிக்குள் அனுப்பிவைக்குமாறு கேட்டுக்கொள்ளபடுகிறீர்கள்.

இயேசுவின் பிறப்பை கொண்டாடுகிற இந்த மாதத்தில் கிறிஸ்துமஸ் பரிசாக **“கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்”** பத்திரிக்கையை உங்கள் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அறிமுகப்படுத்தும்படியாக சந்தா செலுத்தி பரிசளித்து இவ்வூழியத்தை தாங்கும்படியாக அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

தேவகிருபை நம் அனைவரோடும் இருப்பதாக !

கிறிஸ்துவுக்குள்

*மன்னா செல்வகுமார்*


கிறிஸ்தவ

வரலாற்றுச்

சுவடுகள்

**பதிப்பாசிரியர் : மன்னா செல்வகுமார்**

**வடிவமைப்பு : சுஜித்.S**





**அலுவலக முகவரி**

கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,
கதவு எண் 2-2-3(4),வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (திருநெல்வேலி)

மின்னஞ்சல்: christianhistorical@gmail.com
தொலைபேசி: +91 9176780001
+91 7538812218
04633 290401




# கிறிஸ்துமஸ் மரம் அலங்கார சின்னமா?

# சுவிசேஷ சாதனமா?

பிலிப் கே மல்லி
மேனாள் ஆயர்,
CSI கோத்தகிரி, நீலகிரி.

கிறிஸ்துமஸ் மரம் இல்லாமல் நம்முடைய கொண்டாட்டங்கள் களைகட்டுவதில்லை. ஆனால் இம்மரத்தைக் குறித்து பரிசுத்த வேதாகமத்தில் ஒன்றும் சொல்லப்படவில்லை. ஆயினும் கிறிஸ்துவ வரலாற்றில் இவ்விருட்சத்தின் புதுமையான சாட்சியத்தையும் அதன் பின்னணியையும் நாம் புறக்கணித்தல் இயலாது. அநேக நூற்றாண்டுகளாக பசுமையான இம்மரம் கிறிஸ்துமஸ் நிகழ்வுகளில் தவறாமல் இடம் பெற்று வருகிறது. நம்மிலே சிலர் இது தேவையற்ற சின்னம் எனவும் எண்ணக் கூடும். ஆனால் நாம் தொன்று தொட்டு அறிவித்து வரும் கிறிஸ்து பிறப்பின் செய்திக்கு கிறிஸ்துமஸ் மரம் ஒரு புதிய கோணத்தை அளிக்க முற்படுகிறது என்பது மிகையன்று. இதற்கு ஆதாரமாக நினைவுகூறப்படுவதை பதிவு செய்வதே இந்த எழுத்தாக்கத்தின் நோக்கம்

கிறிஸ்துமஸ் மரம் பற்றிய மரபுகள் ஜெர்மனி தேசத்தில் கிளைத்தவை என்பர். சிறப்பாக மார்ட்டின் லூத்தர் காலத்திற்கு பின்னர், அதாவது கி.பி 16 -ஆம் நூற்றாண்டு முதல் இம்மரபு ஒரு புதிய மெருகினை பெற்றுள்ளது எனலாம். ஜெர்மனி தேசத்தின் அப்போஸ்தலன் என்று புகழ்பெற்றுள்ள பேராயர் போனிஃவேஸ் (St.Boniface - கி.பி 680 -754) இம்மரத்தின் நாயகன் என்று கருதப்படுகிறார். இங்கிலாந்தில் பிறந்த போனிஃவேஸ் அவர்களுடைய இயற்பெயர் வின் விரித் என்பதாகும். இவர் ஜெர்மனி தேசத்திற்கு மிஷனரியாக சென்றார். தம்முடைய நாற்பதாவது வயதுவரை இங்கிலாத்தில் உள்ள வெஸ்ஸெக்ஸ் பகுதியில் துறவியாக வாழ்ந்திருந்த இவர், சில ஆண்டுகள் இன்றைக்குள்ள ஹாலந்து தேசத்தின் பகுதியாக இருந்த ஃப்ரிஸியாவில் மிஷனரியாக பணியாற்றினார் கி.பி 722- ஆம் ஆண்டில் ஜெர்மனி தேசத்தின் மிஷனரி பொறுப்பினை ஏற்றார். நாம் நினைவு கொள்ள வேண்டிய ஒரு முக்கிய உண்மை என்னவென்றால் அந்த நூற்றாண்டுகளில் ஐரோப்பாவில் வாழ்ந்த மக்கள் அனைவரும் நாகரிகமற்ற வனவாசிகளாகவே இருந்தனர் கிறிஸ்துவின் சுவிசேஷம் மட்டுமே அவர்களுக்கு நாகரிகத்தையும், புதிய பண்பாட்டையும் புகட்டிற்று.

போனிஃவேஸ் மேற்கொண்ட சுவிசேஷப் பணிகளில் அவர் சந்தித்தது அந்நாளைய ஜெர்மன் மக்களின் குரூரமான சமய வாழ்வியல் என்பது நினைவு கூறப்பட வேண்டும். அவருடைய சுவிசேஷப்பயணங்கள் அனைத்திலும் இது ஒரு தவிர்க்க முடியாத நிகழ்வாகவே இருந்தது. இப்பயணங்கள் ஒன்றில்தான், அவர் கெய்ஸ்மார் என்ற ஒரு பிற்போக்கான இடத்தை அடைந்தார். அவ்விடத்தில் ஒரு நரபலிக்கான விழாவை அந்த மக்கள் மேற்கொண்டு இருந்தனர். மழை பொய்த்துப் போய் பஞ்சத்தில் இருந்த அவர்கள், தங்கள் தெய்வம் வீற்றிருந்த புனித மரமான ஓக் மரத்தின் அடியில் ஒரு வாலிபனை பலிக்கொடுக்க ஆயத்தம் செய்து இருந்தனர். தம்முடைய உடன் ஊழியருடன் போனிஃவேஸ் அவ்விடத்திற்கு சென்றார். பலி கொடுக்கப்படும் தருணத்தில் அவர்களுடைய பூசாரியிடம் இருந்த கோடாரியை துணிவாகப்

பிடுங்கினார் கண்ணிமைக்கும் நேரத்திற்குள் நிகழ்ந்து விட்ட இந்த அசம்பாவிதத்தில் இருந்து, கூடியிருந்தோர் மீளும் முன்னர், போனிஃவேஸ் அந்த ஒக் மரத்தை வெட்டி சாய்க்க முற்பட்டார், கூடியிருந்தோர் தங்களுடைய தெய்வம் இறங்கி தடுத்துவிடும் என்ற ஆணவத்தில் இருந்தனர் ஆனால், இந்த மரம் வெட்டி வீழ்த்தப்படும் வரை ஒன்றுமே நிகழவில்லை. கதிகலங்கி போன இந்த மக்கள் செய்வதறியாது உறைந்து போயினர். இந்த தருணத்தில் தான், போனிஃவேஸ் அவர்கள் சுவிசேஷம் என்றால் என்ன? கிறிஸ்து யார்? என்ற நற்செய்தியை அம்மக்களோடு பகிர்ந்து கொண்டார். ஜெர்மனி தேசம் முழுவதுமாக சுவிசேஷம் பரவ இதுவே அச்சாணியாக இருந்தது. வெட்டி வீழ்த்தப்பட்ட ஒக் மரம் இருந்த இடத்தில் போனிஃவேஸ் அவர்கள் இந்த சுவிஷேசப் பணியை நினைவுகூற கிறிஸ்துமஸ் மரத்தை நட்டுத் தந்தார் என்பது ஜெர்மன் மக்களின் பிரமாண்டமான நம்பிக்கை. இம்மகத்தான சாட்சியத்தின் கொண்டாட்டமாக இதனுடைய மரபுகள் ஜெர்மனி தேசத்தையும் கடந்து உலகமுழுவதும் பரவிச் சென்றது. போனிஃவேஸ் அவர்களை இவ்வூழியத்தின் வல்லமை மிகுந்த கருவியாக கர்த்தர் உயர்த்தினார். கர்த்தருடைய சித்தத்தின் மறுபக்கத்தையும் நாம் இங்கு கட்டாயம் உணர்ந்துகொள்ள வேண்டும்.

மகத்தான ஜெர்மனி ஊழியத்தை சாதித்த போனிஃவேஸ், தாம் ஆதியிலே ஃப்ரிஸியா மக்களிடையே கொண்டிருந்த அன்பை மறவாது, மீண்டும் அவர்களிடையே ஊழியம் செய்ய கி.பி 753 -ஆம் ஆண்டு புறப்பட்டு சென்றார். அங்கு ஓராண்டு காலத்திற்குப் பின்னர், தாம் ஞானஸ்தானம் கொடுத்தவர்களை திடப்படுத்துவதற்காக ஆயத்தம் செய்திருந்த நாள் வந்தது. கி.பி 754 -ஆம் ஆண்டு ஜீன் மாதம் 5-ஆம் நாள், ஆலயத்தில் திடப்படுத்தல் ஆராதனைக்காக காத்திருந்த சமயம், போனிஃவேஸ் அவர்களும், அவரோடு இன்னும் ஐம்பது விசுவாசிகளும், சுவிசேஷத்தின் விரோதிகளாக இருந்த அந்த மக்களின் போராளிகள் சிலரால் கொல்லப்பட்டனர், இரத்த சாட்சிகளின் இரத்தமே திருச்சபையின் வித்து என்ற திருச்சபையின் முதுமொழிக்கு மரணம் இல்லை. ஏனெனில், மரணத்தை வென்ற முதற்பேறானவரான கிறிஸ்துவின் பிறப்பு நித்தியமானது. போனிஃவேஸ் அவர்களின் வாழ்வும் மறைவும் இந்த மங்காத சத்தியத்தின் சாட்சி என்பதை இந்த கிறிஸ்துமஸ் காலத்தில் நாம் நினைவு கூறுவது தகுதியே ஆகும்.



# தமிழ் வேதாகமத்தின் வரலாறு

அருள்திரு. ஜாண் சாமுவேல்
பண்டாரசெட்டிவிளை

**தமிழ் வேதாகம வரலாறு அட்வெந்து நாட்களில் இரண்டாவது ஞாயிறு வேதாகம ஞாயிறாக ஆசரிக்கப்படுகிறது. நாம் வாசிக்கும் வேதாகமம் தமிழில் கிடைத்திருப்பது இறைவனின் பெரிய கிருபையே என்றெண்ண வேண்டும். தமிழ் வேதாகமத்தின் வரலாற்றை அறிந்துகொள்ளுவது மிக அவசியமான ஒன்றாகும்.**

சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்பு வரை நாம் பயன்படுத்தும் தமிழ் வேதாகமம் இன்று அழைக்கப்படுவது போன்று 'பரிசுத்த வேதாகமம்' என்ற பெயரில் அழைக்கப்படாமல் 'சத்திய வேதம்' என்ற பெயரிலே அழைக்கப்பட்டது.

கிறிஸ்தவம் இந்த தேசத்திற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பு வந்திருந்தாலும் வேதாகம மொழிபெயர்ப்பில் யாரும் அதிக கவனம் செலுத்தவில்லை என்றே கூற வேண்டும். 1660ம் வருடத்தில் யாழ்ப்பாணத்தில் வேதாகம மொழிபெயர்ப்பிற்கான முயற்சி ஒன்று நடந்தது. பலிப்புஸ் பக்தேயுஸ் என்ற சீர்த்திருத்த திருச்சபை குருவானவர் மத்தேயு எழுதின சுவிசேஷத்தை முதல்முதலாக தமிழில் மொழிப்பெயர்த்தார். ஆனால் உடனடியாக அது அச்சிடப்படவில்லை. அவரது மொழிப்பெயர்ப்பு 1741 ம் ஆண்டில் பல திருத்தங்களுக்குப் பிறகு கொழும்பில் அச்சிடப்பட்டது.

### சீகன்பால்கு மொழிபெயர்ப்பு

இந்திய வரலாற்றில் முதன் முதலாக பரிசுத்த வேதாகமம் மொழி பெயர்க்கப்பட்டிருக்குமானால் அது தமிழ் மொழியில்தான். 1706ம் ஆண்டு தமிழகம் வந்து சேர்ந்த சீகன்பால்கு ஆரம்பகாலங்களில் தரையில் மணல் பரப்பி




எழுத கற்றுகொண்டார். அதன்பிறகு பனை ஓலைகளில் எழுதுவதற்கும் கற்றுகொண்டார். அதுவே அவருக்கு பேருதவியாக இருந்தது. இரண்டு ஆண்டுகளில் தமிழ் மொழியைக் கற்றுகொண்ட சீகன்பால்கு, வேதாகமத்தை தமிழில் 1708ம் ஆண்டு அக்டோபர் மாதம் 17ம் தேதி தொடங்கி 1711ஆம் ஆண்டு மார்ச் மாதம் 31ம் தேதி முடித்தார். சில ஆண்டுகள் கழித்து 1714ம் வருடம் புதிய ஏற்பாட்டை அச்சிட்டு மக்களுக்குக் கொடுத்தார்.

பழைய ஏற்பாட்டில் ரூத் புத்தகம் வரையே மொழிப்பெயர்ப்பு செய்திருந்தார். சீகன்பால்குவின் மொழிபெயர்ப்பில் வேதாகமம் வசனம் வசனமாக பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு வசனங்களின் முடிவிலும் புள்ளிவைக்கப்பட்டு வசனம் முடிந்துள்ளது. மிக அழகாக காண்பிக்கப்பட்டுள்ளது. முழு வேதாகம மொழிபெயர்ப்பினை முடிப்பதற்கு முன்னதாகவே சீகன்பால்கு காலமானார். சீகன்பால்கு பழைய ஏற்பாட்டு மொழிபெயர்ப்பினை எதில் நிறுத்தினாரோ அதிலிருந்து அவருடைய நண்பர் சூல்ச்சு தொடங்கினார். எனினும் ஒரு சில காரணங்களால் அவரும் மொழிபெயர்ப்பினை இடையில் நிறுத்தினார்.

### பப்ரிஷியஸ் மொழிபெயர்ப்பு

சீகன்பால்குவின் மொழிபெயர்ப்பினைத் தொடர்ந்து பிலிப்பு ஜோகன் பப்ரிஷியஸ் (Philip Johahn Fabricius) தொடர்ந்தார். 1740ம் ஆண்டு தமிழகம் வந்தபொழுது 30 வயதுடையவராக இருந்தார். இவரை சன்னியாசி ஐயர் என்று மக்கள் அழைத்தனர். தமிழகம் வந்து தமிழின் மீது கொண்ட ஆர்வத்தினால் தமிழ் மொழியை ஏழு மாதங்களுக்குள்ளாக கற்று தேறினார். இவருடைய ஊழியத்தினை எஸ்.பி.ஸி.கே சங்கம் தாங்கி வந்தது. சங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்க 1752ம் ஆண்டு தமிழ் மொழியில் புதிய ஏற்பாட்டை மொழிபெயர்க்கும் பணி அவருக்குக் கொடுக்கப்பட்டது. இவர் தான் செய்த மொழிப்பெயர்ப்பு முழுவதும் முழங்காலில் நின்று


Bible. O.T. Tamil

THE
OLD TESTAMENT,
IN TAMIL.

மனிதர்கள் இரட்சிக்கப்படுவதற்காகச்
சருவலோக தயாபரரான கர்த்தர் அருளிச்செய்த
சத்தியவேதமென்கிற
பழைய ஏற்பாடு.
இஃது
மூலவாக்கியம் பெபுரிசியசையரால்
எபிரேயுபாஷையிலிருந்து
தமிழிலே திருப்பப்பட்டது.

MADRAS:
THE MADRAS AUXILIARY BIBLE SOCIETY,
Printed at the American Mission Press.
1860.



செய்ததாக ஒரு வரலாறு உண்டு. மொழிபெயர்ப்பினை தமிழில் செய்துமுடிக்க இருபது ஆண்டுகள் எடுத்துக்கொண்டார். இவர் செய்த மொழிபெயர்ப்பினை எஸ்.பி.ஸி.கே சங்கத்தினர் தரங்கம்பாடியில் பிரசுரம் செய்தனர். அது நான்கு பாகங்களாக 808 பக்கங்களில் வெளிவந்தது.

பாமர மக்களும் புரிந்துகொள்ளும் வகையில் தன் மொழிபெயர்ப்பு அமைய வேண்டும் என்பதில் மிகவும் கவனம்

செலுத்தினார். தன்னுடைய வீட்டின் முன் நின்ற பெரிய மரத்தின் அடியில் எல்லா வகையான மக்களையும் அமர செய்து தான் மொழியாக்கம் செய்தவற்றை வாசிக்கச்செய்து அவை புரிகிறதா என்பதை அறிந்துகொள்வதில் மிக கவனம் செலுத்தினார். அதன் பின்னர் சில திருத்தங்களை மேற்கொள்ளுவார். திருத்தங்கள் செய்து முடித்தப்பின்பு அரசு துபாசிகளைக் கொண்டு சரிசெய்து பின்னர் அச்சுக்கு அனுப்பப்படும்.

பழைய ஏற்பாடு முழுவதையும் மொழிபெயர்த்து முடித்தார். பழைய ஏற்பாடு மொத்தம் நான்கு பாகங்களாக வெளியிடப்பட்டிருக்கிறது. 1777ம் ஆண்டு தொடங்கிய வேலை 1796ம் ஆண்டு நிறைவுபெற்றது. எனினும் தான் செய்த மொழிபெயர்ப்பு வெளிவருவதற்கு முன்பாகவே 1791ம் வருடம் ஜனவரி மாதம் 23ம் தேதி காலமானார். ஆங்கிலத்தின் மேல் இருந்த மோகத்தினால் பிற்காலங்களில் இவரது மொழிபெயர்ப்பின் அழகு குறைய ஆரம்பித்தது. லூத்தரன் திருச்சபையார் இந்த மொழிபெயர்ப்பினையே பயன்படுத்தி வருகின்றனர். இவருடைய மொழிபெயர்ப்பினை 'பொன் மொழிபெயர்ப்பு திருப்புதல்', திருத்தம் என்றழைக்கப்படுகிறது. இன்றைய கிறிஸ்தவர்கள் பயன்படுத்தும் 'கிறிஸ்தவ தமிழுக்கு' சொந்தக்காரர் என்று சொன்னாலும் அது மிகையாகாது.

### யாழ்ப்பாணத்தில் மொழிபெயர்ப்பு பணிகள்

இது

வாலமாணக்கர்

வேதாகமத்தைக் காலவரையறையோடு

லெகுவாய்

கற்கும்பொருட்டுச் செய்யப்பட்ட

சத்திய

வேதப்பொழிப்பு.

யாழ்ப்பாணத்துச் சிறுபுத்தகசங்கத்தாரால்

மானிப்பாய்

இயந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டது.

[4TH ED. 5,000.]

JAFFNA:

RIPLEY AND STRONG, PRINTERS.

1857.

இக்காலகட்டத்தில் தமிழகத்தைப் போன்று யாழ்ப்பாணத்திலும் வேதாகம மொழிப்பெயர்ப்பு வேகமெடுக்க ஆரம்பித்தது. பல்தேயுஸ் என்பவர் முதலில் மொழிபெயர்க்க ஆரம்பித்தார் ஆனால் சரிவர முடிக்க இயலவில்லை. பல்தேயுஸைத் தொடர்ந்து அட்ரியானஸ் டிமோ என்ற டச்சு குருவானவர் 1692ம் ஆண்டு புதிய ஏற்பாட்டினை மொழிபெயர்த்தார். ஆயினும் அம்மொழிபெயர்ப்பு அச்சாகவில்லை. யாழ்ப்பாணத்தில் வேதாகம மொழிபெயர்புக்கு இருந்த ஆர்வம் குறையவில்லை. டி மொலொ என்ற வேத பண்டிதர் இந்த பணிக்கென நியமிக்கப்பட்டார். பல மொழிகளைக் கற்றறிந்த இவர் 'மெலொ பீ என்றழைக்கப்பட்டார். இவர் புதிய ஏற்பாட்டை மொழிபெயர்த்து 1759ம் ஆண்டு இவரது மொழிபெயர்ப்பு பிரசுரமாயிற்று.

### இரேனியஸ் மொழிபெயர்ப்பு

இக்காலகட்டத்தில் தென் தமிழகத்தில் கிறிஸ்தவம் வேகமாக பரவ ஆரம்பித்தது. அநேகர் கிறிஸ்தவர்களாக மாறினார்கள். இவர்களை காணும்படியாக கிளாடியஸ் புக்கனன் என்ற கிழக்கத்திய கம்பெனியின் குருவானவர் அவர்கள் வந்தார்கள். அவர்களை சந்தித்த மக்கள் தங்களுக்கு பொருளும் வேண்டாம், பணமும் வேண்டாம் கடவுளுடைய வார்த்தையைக் கொடுங்கள் என்று கேட்டனர். அத்தனை அதிக தாகத்தோடு கூட மக்கள் வேதாகமத்திற்காக காத்திருந்தார்கள். இச்சமயத்தில் தான் 1804ம் ஆண்டில் தொடங்கப்பட்ட வேதாகம சங்கம், எங்கெல்லாம் பிரிட்டனின் ஆட்சி நடைபெற்றதோ அங்கெல்லாம் தன் வேதாகம சங்கங்களை ஏற்படுத்தியது. அதின் விளைவாக இந்திய தேசத்தில் முதலில் கொல்கத்தாவிலும் அதன் பிறகு சென்னையிலும் இச்சங்கம் நிறுவப்பட்டது. சென்னை வேதாகம சங்கம் பப்பிரீசியுஸ் அவர்கள் மொழிபெயர்த்த வேதாகமத்தை மறுபடியும் பிரசுரம் செய்ய விரும்பினார்கள். ஆனாலும் அந்த தமிழில் ஒரு சில மாற்றங்களை செய்ய வேண்டுமென்று முடிவெடுத்தனர். அந்த உன்னதமான பொறுப்பு தென்னிந்திய அப்போஸ்தலன் என்று அழைக்கப்படும் கனம் சார்லஸ் தியோபிலஸ் ஈவால்டு இரேனியஸ் (C.T.E. Rhenius) ஐயரிடம் கொடுக்கப்பட்டது.

THE POCKET TAMIL TESTAMENT.

உலக இரட்சகராகிய

இயேசுக்கிறிஸ்துநாதர் அருளிச்செய்த

புதிய ஏற்பாடு.

இஃது

மூலவாக்கியம் இரேனியுசையரால்

கிரேக்க பாஷையிலிருந்து

தமிழிலே திருப்பப்பட்டும்,

சென்னபட்டணத்திலுள்ள

சத்தியவேத சங்கத்தாரால் பரிசோதித்து

இங்கிலிஷ் ஒத்துவாக்கிய பைபிலின்படி

ஏற்படுத்தப்பட்டுமிருக்கிறது.

MADRAS:

PUBLISHED BY THE MADRAS AUXILIARY BIBLE SOCIETY.

Printed at the American Mission Press.

இரேனியஸ் ஐயரவர்கள் வேதாகம மொழிபெயர்ப்பினை 1815ம் ஆண்டு நவம்பர் மாதம் 15ம் நாளிலே தொடங்கினார்கள். பர்பிரீசியுஸ் அவர்கள் பயன்படுத்திய அநேக வார்த்தைகளுக்கு புதிய வார்த்தையினை பயன்படுத்தினார்கள். ஏனென்றால் பர்பிரீயுஸ் அவர்கள் மொழிபெயர்ப்பு செய்து ஐம்பது ஆண்டுகளுக்கு மேற்பட்ட நாட்களில் தமிழ் நடை வெகுவாக மாறியிருந்தது. எனவே மக்கள் அறிந்துகொள்ளுமாறு பல சீர்த்திருந்தங்களைச் செய்தார்கள். இறுதியாக 1833ம் ஆண்டு வேதாகம சங்கத்தாரால் புதிய ஏற்பாடு மட்டும் அச்சிடப்பட்டது. பர்பிரீசியுஸ் காலத்தில் இருந்த அச்சுக்கலையைக் காட்டிலும் அப்பொழுது அச்சுக்கலை மிக நேர்த்தியாக அமைந்திருந்ததினால் புதிய ஏற்பாடு புதிய பொலிவோடு கூட வெளிவந்தது. அதன் பின்னர் சென்னையில் இருந்த அமெரிக்கன் மிஷன் அச்சகத்தில் 1840ம் ஆண்டு முதல் முறையாக பப்ரீசியுஸ் அவர்களின் பழைய ஏற்பாடும் இரேனியஸ் ஐயரவர்களின் புதிய ஏற்பாடுமாக இணைந்து வெளியிடப்பட்டது. முழு வேதாகமத்தையும் எப்படியும் மொழிபெயர்த்து விட வேண்டுமென்கிற ஆர்வம் கொண்டிருந்த இரேனியஸ் ஐயரவர்கள் தானியேல் வரை மிக நேர்த்தியாக மொழிபெயர்ப்பு செய்திருந்தார்கள். எனினும் ஐயரவர்களுடைய கடைசி காலங்கள் சில சங்கடங்களைக் கொண்டுவந்தது. அவர்களும் சுகவீனமடைந்து 1838ம் ஆண்டு தன் மொழிபெயர்ப்பு பணியினை முடிக்கும் முன்னதாக மறுமைக்குட்பட்டார்கள்.

### பீட்டர் பெர்சிவல் மொழிபெயர்ப்பு

வேதாகமத்தின் நான்காம் தமிழ் மொழிபெயர்ப்பினை பீட்டர் பெர்சிவல் (Peter Percival) என்பவர் செய்தார். அமெரிக்க மெதடிஸ்ட் மிஷனை சார்ந்த இவர் 1826ம் ஆண்டு யாழ்ப்பாணம் வந்து தன் பணியினைத் தொடங்கினார். மூன்று ஆண்டுகளில் தமிழ் மொழியினை நன்கு கற்றறிந்து பிரசங்கங்களும் செய்ய ஆரம்பித்தார். பீட்டர் பெர்சிவல் அவர்களுக்கு ஆறுமுக நாவலர் என்பவர் உதவிசெய்வதற்கு உடன்பட்டார். மொழிபெயர்ப்பினை

செய்வதற்கு ஐந்து நபர்கள் அடங்கிய குழு ஒன்று அமைக்கப்பட்டது. அதில் சாமுவேல் ஹாச்சிங்ஸ் என்ற எபிரேயப் புலமை பெற்றவரும், ஹாய்சிங்டன் என்ற சைவ சித்தாந்த அறிஞரும், அகராதிகள் வெளியிட்டு புகழ்பெற்ற வின்ஸ்லோவும் அக்குழுவில் இருந்தார்கள். பணிகளைத் தொடங்குவதற்கு முன்னர் சென்னை வேதாகம சங்கத்தில் பணியாற்றியவர்கள் அநேகம் பேர் ஆங்கிலிக்கன் திருச்சபையை சார்ந்தவர்களாக இருந்த படியினால் இங்கிலாந்தில் 1611ம் ஆண்டு வெளியிடப்பட்ட அதிகாரப்பூர்வ ஆங்கில வேதாகமத்தை அடிப்படையாக கொண்டே மொழிபெயர்க்க வேண்டுமென்றும், அதிலிருக்கும் அடையாளங்கள், நிறுத்தகுறிகள் போன்றவைகளும் இடம்பெற வேண்டுமென்கிற கட்டளையும் கொடுக்கப்பட்டது. ஆனால் இதனை ஏற்றுகொள்ள இந்த குழுவிற்கு மனமில்லாதபடியினால் மேலிடத்திற்கு எழுதினார்கள். நிபந்தனைகளில் தளர்வுகள் ஏற்பட்டு இவர்கள் இரேனியஸ் ஐயரவர்களின் மொழிபெயர்ப்பினை வைத்துக் கொள்ளலாம் என்றனர். மொழிபெயர்ப்பு வேகமெடுக்க ஆரம்பித்தது. பெரும்பாலான பகுதிகளை ஆறுமுகம் நாவலரே மொழிபெயர்த்திருக்கின்றார். 1840ல் ஆரம்பிக்கப்பட்ட இந்த பணி 1848ம் ஆண்டு முடிவடைந்தது. 1846ம் ஆண்டுக்கு பின்னர் பெர்சிவல் அவர்கள் முழுமூச்சுடன் மொழிபெயர்ப்பு பணியினை செய்து முடித்தார்கள். மிக குறுகிய காலத்தில் செய்யப்பட்ட மொழிபெயர்ப்பு என்கிற பெருமை இப்பதிப்பிற்குண்டு.

சென்னை வேதாகம சங்கம் இம்மொழிபெயர்ப்பினை நிராகரித்துவிட்டது. இதன் பரிசோதனைப் பதிப்பு என்று பெயரிட்டது. யாழ்ப்பாணத் திருப்புதல் மூல மொழியினை நெருங்கித் தழுவவில்லை என்றும், யாழ்ப்பாண தமிழ் தமிழகத்தில் பேசப்படும் தழிழிலிருந்து மாறுபட்டுள்ளது என்று நிறுத்திவைக்கப்பட்டது. அதோடு கூட இதுவரை பயன்பாட்டில் இல்லாத கடவுளைக் குறிக்கும் தேவன்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. இதற்கு முந்திய பதிப்புகளாகிய பப்ரீசியஸ் மற்றும் இரேனியஸ் ஆகியோரின் மொழிபெயர்ப்புகளில் எங்கெல்லாம் பராபரன் என்ற வார்த்தையை பயன்படுத்தினார்களோ அங்கெல்லாம் தேவன்' என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டது. கடினமான சமஸ்கிருத வார்த்தைகள் மற்றும் 'தேவன்' என்ற வார்த்தைகளினால் இம்மொழிபெயர்ப்பு நிறுத்திவைக்கப்பட்டது.

### மிஷனெரி மொழிபெயர்ப்பு

பெர்சிவெல் மற்றும் அவரது குழுவினர் இணைந்து செய்த மொழிபெயர்ப்பினை ஏற்றுகொள்ளாத வேதாகம சங்கத்தினர் மறுபடியுமாக ஒரு குழு அமைத்து வேதாகமத்தை மொழிபெயர்க்க திட்டமிட்டனர். அச்சமயம் வெளிநாட்டு மிஷனெரி சங்கங்கள் தமிழகத்தை ஆக்கிரமித்திருந்தது. எனவே மிஷனெரிகளைக் கொண்டு அப்பணியை நிறைவேற்ற திட்டமிட்டனர். அப்பொழுது பணிசெய்துகொண்டிருந்த மிஷனெரிகள் 95 பேருக்கு அழைப்புவிடுக்கப்பட்டது. எனினும் 28 பேர் மாத்திரம் பதில் அளித்தார்கள். சிலர் ஆலோசனைகளை வழங்கினார்கள். அவர்களுள் அருள்திரு. ஜியார்ஜ் பெற்றிட் ஐயரவர்கள் வழங்கிய ஆலோசனை ஏற்றுகொள்ளப்பட்டது. அவர்கள் வழங்கிய ஆலோசனை என்னவெனில் பப்ரீஸியஸ் அவர்கள் மொழிபெயர்ப்பினை மறுபடியுமாக சீர்செய்வதே ஆகும். கொடுக்கப்பட்ட பணியினை நிறைவேற்றி முடித்தனர். மிஷனெரி பைபிள் என்று இம்மொழிபெயர்ப்புக்கு பெயருண்டு,


பழைய புதிய உடன்படிக்கைகள்

அடங்கிய

வேதபுத்தகம்.

இஃது

இங்கிலாந்துமுதலியசருவதேசவேதசங்கத்தாரின்

உத்தரவின்படி

மூலபாஷைகளிலிருந்துமொழிபெயர்த்து முந்தினமொழிபெயர்ப்புகளை

கொண்டு பரிசோதிக்கப்பட்டிருக்கின்றது.

சென்னநகரம் :

அமெரிகன் மிஷன் அச்சுக்கூடத்திற் பதிக்கப்பட்டது.

௲௮௱௫௰௫.



### பவர் மொழிபெயர்ப்பு

பலதரப்பட்ட சங்கங்களில் சுவிசேஷ வேலையை செய்துகொண்டிருந்த சூழலில் பலதரப்பட்ட கோட்பாடுகள் நிறைந்திருக்கின்ற காலத்தில் எல்லாரும் ஏற்றுகொள்ளும்படியான ஒரு வேதாகமம் வேண்டுமென்ற நோக்கோடு கூட புதிய ஒரு மொழிபெயர்ப்பின் பணியினை தொடங்கியது சென்னை வேதாகம சங்கம். புதிய மொழிபெயர்ப்பின் பொறுப்பு எஸ்.பி.ஜி மிஷனெரியான எச். பவர் (Rev. Henry Bower) என்பவரின் தலைமையில் கொடுக்கப்பட்டது. ஒவ்வொரு மிஷனெரி சங்கமும் ஒரு பிரதிநிதியை அனுப்ப வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டு குழு ஒன்று அமைக்கப்பட்டது. அக்குழுவில் பவர் ஐயரவர்கள், முத்தையா பிள்ளை, R.கால்டுவெல் ஐயரவர்கள், சார்ஜண்ட் ஐயரவர்கள், வில்லியம் திரேஸி, J.W. ஸ்கடர், ஸ்போல்டிங், வின்ஸ்லோ , T. பிரதர்ட்டன், கில்னர், C.S. கோலப், P.இராஜகோபால் ஆகியோர் இடம்பெற்றிருந்தனர். ஏப்ரல் மாதம் 1858ம் வருடம் பணியினை பவர் ஐயரவர்கள் ஆரம்பித்தார்கள். பல ஆலோசனைகள், கூட்டங்களுக்குப் பிறகு திருத்தம் அங்கீகரிக்கப்பட்டு புதிய ஏற்பாடு 1864லிலும், பழைய ஏற்பாடு 1867லிலும் அச்சேறின. முழு வேதாகமம் 1971ம் ஆண்டு கிறிஸ்தவ கல்வி அபிவிருத்திச் சங்க அச்சகத்தில் அச்சிடப்பட்டது. பவர் மொழிபெயர்ப்புக்கு 'ஐக்கிய திருப்புதல்' என்ற பெயரும் உண்டு,

### லார்சன் மொழிபெயர்ப்பு

காலங்கள் செல்ல செல்ல பவர் மொழிபெயர்ப்பில் காணப்பட்ட குறைகள் தெரிய ஆரம்பித்தது. புதியதாய் சில மாற்றங்களை செய்ய விரும்பி லார்சன் ஐயரவர்களை தலைவராக கொண்டு ஐக்கிய மொழி பெயர்ப்பில் காணப்பட்ட குறைகளை சரி செய்ய விரும்பினர். 'தேவன்' என்ற வார்த்தைக்கு பதிலாக 'கடவுள்' என்ற பதத்தை இக்குழுவினர் பயன்படுத்தி வெளியிட்டனர். 1928ம் ஆண்டு புதிய ஏற்பாட்டையும் அதனைத் தொடர்ந்து அதே ஆண்டிலே முழு வேதாகமத்தையும் வெளியிட்டனர். தமிழ் வேதாமக மொழிபெயர்ப்பு வரலாற்றில் இதனை ஒரு சோகமான பகுதியாகக் கருதுகின்றனர். ஏனென்றால் இம்மொழிபெயர்ப்பினை அறிஞர்கள் ஏற்றுகொண்டார்களே தவிர பாமர மக்கள் ஏற்றுக்கொள்ளவில்லை .

### மோனகன் மொழிபெயர்ப்பு

பல ஏற்ற இறக்கங்கள் காணப்பட்டாலும் மறுபடியுமாக மொழிபெயர்ப்புகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டது. அருள்திரு. மோனகன் அவர்கள் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டு மொழிபெயர்ப்பு நடந்தது. இக்குழுவினர் 1941ஆம் ஆண்டு புதிய ஏற்பாட்டையும் 1949ஆம் ஆண்டு பழைய ஏற்பாட்டையும் மொழிபெயர்த்து வெளியிட்டனர். 1954ஆம் ஆண்டு மறுபடியுமாக புதுப்பித்து புதிய, பழைய ஏற்பாடு இரண்டும் சேர்த்து வெளியிடப்பட்டது.

### இராஜரீகம் மொழிபெயர்ப்பு

மோனகன் ஐயரவர்களின் திருப்புதலில் திருப்தி கொள்ளாத

மக்கள் அதனை பயன்படுத்துவதில் தயக்கம் கொண்டனர். எனவே மற்றொரு மொழிபெயர்ப்பு தேவை என்று உணர்ந்து எல்லா சமய மக்களும் பயன்படுத்தும் விதமாக ஒன்றை வெளியிட முன்வந்தனர். அருள்திரு. இராஜரீகம் அவர்களின் தலைமையில் ஒரு குழு அமைத்து மொழிபெயர்ப்பு பணிகள் தொடங்கின. புகழ்பெற்ற இறையியலாளர்களான அ.இ. இன்பநாதம் மற்றும் முனைவர் தயானந்தன் பிரான்சிஸ் போன்றோர் இடம்பெற்றிருந்தனர். முழு வேதாகமும் மொழிபெயர்க்கப்படவில்லை. 1976ஆம் ஆண்டு புதிய ஏற்பாடும், சங்கீதங்களும் வெளியாயின.

**திருவிவிலியம்**

காலத்திற்கேற்ப தமிழ் மொழியின் வளர்ச்சி வேதாகம மொழிபெயர்ப்பினை நிறுத்துவதற்கு அனுமதிக்கவில்லை. பற்பல முயற்சிகளும் அவ்வப்போது நடந்துகொண்டே இருந்தது. வேதாமக வரலாற்றில் நம் தலைமுறை வரை நடந்த மொழிபெயர்ப்புகளுள் இறுதியானது திருவிவிலியம் ஆகும். இன்றைய தமிழில் மிக எளிமையான நடையில் இது மொழிபெயர்க்கப்பட்டது. 35 வேத பண்டிதர்கள் இணைந்து இத்திருப்புதலுக்காக உழைத்தார்கள். இறுதியாக 1995ஆம் ஆண்டு நவம்பர் மாதம் இம்மொழிபெயர்ப்பு வெளியிடப்பட்டது.

இத்தனை கஷ்டங்களைக் கடந்து இன்று நம் தாய் மொழியில் பரிசுத்த வேதம் நம்முடைய கரங்களில் கிடைத்திருப்பது கர்த்தருடைய பெரிதான கிருபையே அன்றி வேறில்லை. எனவே அனைத்து திருச்சபைகளிலும் மற்றும் குடும்பங்களில் வேதாகமத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும்.



# இருளிருந்து வெளிச்சத்தை நோக்கி வந்த முதலூர்

J.ஜான் ஞானராஜ்



முதலூரில் அதன் அருகிலுள்ள விஜயராமபுரம் மற்றும் சண்முகபுரம் கிராமங்களில் வசித்து வந்த கிறிஸ்தவர்கள் குடியேறினர்

இந்த கிராமங்களில் கிறிஸ்தவர்களானவர்களுக்கு அங்கு இருந்த இந்துக்களால் அதிகமான தொல்லைகள், துன்பங்கள் கொடுக்கப்பட்டன. அப்போது அப்பகுதி கிறிஸ்தவர்களின் தலைமை உபதேசியார் ஆக காலன் குடியிருப்பை தந்தை ஊராகவும் விஜயராமபுரத்தை தாய் ஊராகவும் கொண்ட முதல் புராட்டஸ்டன்ட் கிறிஸ்தவரான சின்னமுத்து என்ற தாவீது சுந்தரானந்தம் இருந்தார். அவர் தொல்லைகள் துன்பங்கள் இன்றி புதிய கிறிஸ்தவர்கள் வாழும்படி கிறிஸ்தவ குடியிருப்பு ஒன்றை உருவாக்க திட்டமிட்டார் தாவீது சுந்தரானந்தம் உபதேசியாரின் கடின உழைப்பையும் தளராத ஊக்கத்தையும் கண்ட ஆற்காடு நவாபின் படைத் தளபதியாக இருந்த எவரெட் என்ற ஆங்கிலேயர் அதற்கென பண உதவி செய்ய முன்வந்தார். அவர் கொடுத்த பண உதவியினால் 1799 ஆகஸ்ட் மாதத்தில் அடையலுக்கு அருகில் நீள் சதுர வடிவ நிலம் ஒன்று வாங்கப்பட்டது. அந்த நிலத்தை வாங்குவதற்கு கொடுக்கப்பட்ட தொகை பதினோரு பூவராகன். அந்த காலத்து வழக்கப்படி ஒரு பூவராகன் என்பது இரண்டு ரூபாய் 88 காசு ஆகும்.

முதல் கிறிஸ்தவ குடியிருப்பு கிராமமாக உருவான முதலூரில் முதன் முதலில் ஏழு குடும்பத்தைச் சார்ந்த 28 பேர் குடியேறினார்கள் இவர்களுக்காக சதுர வடிவ கிணறு ஒன்று தாவீது சுந்தரானந்தம் உபதேசியார் மூலம் முதலூரில் உடனடியாக அமைக்கப்பட்டது இதற்குப் பின்னர் தற்போதைய முதலூர் தேவாலய வளாகத்தில் தென்கிழக்கு மூலையில் முதலூரை சுற்றியிருந்த ஊர்களில் சிறுபான்மை ஆக இருந்த கிறிஸ்தவர்கள் குடும்பம் குடும்பமாக முதலூரில் குடியேறிகொண்டே வந்தனர்.

சுற்று கிராமங்களில் இருந்த பிற மதத்தவர்கள் முதலூரின் தொடக்ககால கிறிஸ்தவர்களை அச்சுறுத்தி கொண்டிருந்ததால் தாவீது சுந்தரானந்தர் முதலூர் இளைஞர்களுக்கு சிலம்பாட்ட பயிற்சியை கொடுத்தார் .

சிலம்பாட்ட ஆசானாக இருந்தவர் அக்காலத்தில் புகழ் பெற்றவராக இருந்த ஆசான் கற்குவேல் நாடார் அவர்கள் இந்த சிலம்பாட்ட குழு தடிக்கம்பு சேனை என அழைக்கப்பட்டது. அச்சுறுத்துபவர்களை இந்த குழு தட்டிக் கேட்டது. ஆதலால் அமைதி நிலவியது.



# சரித்திர தடயங்கள்

# மருத்துவ பணியும் நற்செய்தியும்

நிருபா ஜேசுவடியான்
சென்னை

நம் மண்ணில் கிறிஸ்துவின் நற்செய்தியை வேரூன்றச் செய்ய முன்னோடி மிஷனரிகள் பலவிதமான முயற்சிகளை மேற்கொண்டனர். ஒரு மனிதன் நற்செய்தியை அனுபவிக்க வேண்டுமானால் கல்வி பணி, சமூக பணி மற்றும் மருத்துவ பணியும் அவர்களுக்கு கொடுக்கப்பட வேண்டும் என்பதை புரிந்துசெயல்பட்டனர். அக்காலத்தில் நெய்யூர் பகுதியை சுற்றி வாழ்ந்த மக்கள் காலரா, அம்மை நோய், தொழுநோய் போன்ற கொள்ளை நோயினால்பாதிக்கப்பட்டு ஆயிரக்கணக்கானோர் மடிந்தனர். அதுமட்டுமல்லாது அறியாமை மற்றும் மூடநம்பிக்கைகளில் மூழ்கி வாழ்ந்து கொண்டிருந்தனர். ஒருவர் நோயுற்றால் தீய ஆவிகள் அவரை பிடித்திருப்பதாக நம்பினார்கள். அதனை விரட்ட மந்திரவாதிகளை நாடிச் சென்றனர். மந்திரவாதிகள் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பியால் நோயாளியின் உடலில் சூடு போடுவதும், நன்றாக எரிக்கும் மிளகாயினை நோயாளியின் கண்களில் தூவுவதும் வழக்கமான நடவடிக்கையாக இருந்தது. இத்தகைய கொடுமையால் ஏற்படும் வேதனைகளை தாங்காத நோயாளி அலறும் போது, தீய ஆவி அவனை விட்டு ஓடுவதாக நம்பினார்கள். மேலும் பசுவின் சாணத்தை நோயாளியின் தலை மேல் பூசினால் ஓடிய ஆவி மீண்டும் அவனை அணுகாது என எண்ணினார்கள். இவைகளை கண்ட மிஷனரிகளின் மனதில் இம்மக்களைக் குறித்த பாரம் அழுத்தியது. இவர்களுக்கு மருத்துவ வசதி கட்டாயம் அவசியம் என்பதை உணர்ந்தார்கள். நோய் வருவதற்கு தீய ஆவிகள் முக்கிய காரணம் என்ற கருத்துடைய இம்மக்களுக்கு மருத்துவத்தை குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்துவதற்குள் மிஷனரிகள் அதிககஷ்டப்பட்டனர்.

இங்கிலாந்திலிருந்து வந்து பணியாற்றி வந்த சார்லஸ் மீட் ஐயரின் காலத்தில் நெய்யூரில் கிறிஸ்தவம் வேகமாக வளர்ந்து வந்தது. தன்னுடைய நீதிபதி பதவியை துறந்த மீட் ஐயர், இந்திய மக்களின் நலனுக்காக நற்செய்தியுடன் சமூகப் பணியையும் திறம்பட செய்து வந்தார். என்றாலும் மருத்துவப் பணியின் தேவையை உணர்ந்தவர், எப்படியாயினும் தான் பணியாற்றி வரும் நெய்யூரில் மருத்துவமனை ஒன்றினை தொடங்கத் திட்டமிட்டார். அதற்கு தேவையான நிதியையும், மருத்துவர்களையும் லண்டன் அருட்பணி இயக்கம் மூலம் பெற்றுக்கொள்ள எண்ணினார். 1837ஆம் ஆண்டு மீட் ஐயர் சுகவீனமாகி இங்கிலாந்து சென்றார். அப்பொழுது அங்கு நடைபெற்ற கூடுகைகள் பலவற்றில் கலந்து கொண்டு திருவிதாங்கூர் மக்களின் மனநிலை, மூடநம்பிக்கைகள், தான் செய்துவரும் பணிகள் முதலியவற்றை எடுத்துக் கூறி அவர்களிடையே விழிப்புணர்வை உருவாக்கினார். இதனால் இங்கிலாந்தில் உள்ள பலர் திருவிதாங்கூரில் நடைபெற்று வரும் பணிகளுக்கு உதவ முன்வந்தனர். அதோடுமட்டுமல்லாது மீட் ஐயரின் வேண்டுகோளுக்கு இணங்க தலைமைச் சங்கத்தார் ஐந்து மருத்துவ மிஷனரிகளை அனுப்பினார்கள்.

1837ஆம் ஆண்டு அக்டோபர் 20-ஆம் நாள் மீட் ஐயர் புதிய மிஷனரிகளின் குடும்பத்தினரோடு கப்பலேறி, 1838 ஆம் ஆண்டு மார்ச் மாத இறுதியில் இந்திய மண்ணில் கால் பதித்தார். தென்திருவிதாங்கூர் பகுதியை ஊழியத்தின் நிமித்தமாக ஐந்து பிரிவுகளாக பிரித்து, ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொரு மிஷனரி குடும்பத்தை பொறுப்பாக ஏற்படுத்தினார். நெய்யூர் பகுதியில் டாக்டர் ஆர்ச்பால்ட் ராம்சே என்ற மருத்துவ மிஷினரி தன்னுடைய மருத்துவ பணியை தொடங்கினார். மருத்துவமனைக்கு தேவையான கட்டிடங்கள் கட்டுவதற்கு போதிய பண வசதி இல்லாததால் மீட் ஐயர், சில ஓலைப் புரைகளைக் கட்டுவித்தார். அதில் நோயாளிகள் வந்து அமர்ந்தும், தங்கியும் சிகிச்சை பெற்று சென்றனர். இதனைக் கேள்விப்பட்ட மக்கள் வெகு தொலைவில் இருந்தும் நெய்யூருக்கு வந்து மருத்துவ உதவி பெற்றனர். ஒவ்வொரு நாளும் சிகிச்சையை தொடங்குவதற்கு முன்பும் மருத்துவர்கள் வேதம் வாசித்து ஜெபித்து வந்தனர். இயேசுவே பரம வைத்தியர் என்பதை நோயாளிகளுக்கு எடுத்துக் கூறினர். நோயாளிகளுக்கு ஆறுதல் வார்த்தைகளை கூறியதோடு இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியையும் கூறினார்கள்.

1839 ஆம் ஆண்டு நெய்யூர் பகுதிகளில் காலரா, வாந்தி போன்ற கொடிய நோயகள் பரவியதால் மக்கள் மரணம் அடைந்தார்கள். மருத்துவர்களின் பற்றாக்குறையை உணர்ந்த சார்லஸ் மீட்ஐயர், மருத்துவ மிஷனரிகளை அனுப்புமாறு லண்டனில் உள்ள தலைமைச் சங்கத்தாரை வற்புறுத்தினார். அவர்களும் அவ்வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு மருத்துவ மிஷனரிகளை அனுப்பி உதவினார்கள். டாக்டர் சார்லஸ் ஹோல்டர்லீச், டாக்டர் ஜான்லோவ், டாக்டர் தாம்சன்ஸ்மித் தாம்சன், டாக்டர் ஜேம்ஸ் டேவிட்சன், டாக்டர் ஹாவர்டு சாமர்வெல் என மருத்துவர்கள் பலர் எழும்பினார்கள். இதனால் காலரா, தொழுநோய் போன்ற கொடிய நோய்களால் பாதிக்கப்பட்ட மக்கள் சுகம் பெற்றனர். நெய்யூர் மிஷன் மருத்துவமனையின் புகழ் நாடு முழுவதும் பரவிற்று. மக்கள் பரிகாரியாகிய இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டனர். அதுமட்டுமல்லாது அன்று காணப்பட்ட தீண்டாமை, நெருங்காமை, பார்க்காமை ஆகிய சமூக தீங்குகளிலிருந்து மருத்துவப்பணி நிலையான விடுதலையை மக்களுக்கு கொடுத்தது. மருத்துவமனையின் ஒரே அறையில் பிராமணர், சூத்திரர் என பலரும் பல நாட்கள் தங்கியிருந்து சிகிச்சை பெற்றனர். இதனால் சாதி பேதம் ஒழிந்தது. மிஷனரிகளின் எளிய சேவையும், அர்ப்பணிப்பும் பெரிய விளைவுகளை நம் மண்ணுக்குத் தந்தது. அவர்கள் தங்கள் சொந்த நாட்டை காட்டிலும், தங்கள் குடும்பத்தை காட்டிலும், நம் மண்ணையும், நம் மக்களையும் அதிகம் நேசித்தார்கள். எல்லாவற்றிற்கும் மேலாக தேவனை அதிகம் நேசித்தார்கள். அவர்கள் எத்தகைய தியாகத்தையும் இழப்பையும் ஏற்க தங்களை

தயாா்படுத்திக் கொண்டார்கள். லாபமான அனைத்தையும் நஷ்டம் என கருதிய அப்போஸ்தலனாகிய பவுலை தொடர்ந்து நம் முன்னே அநேக ஊழியர்கள் வாழ்ந்து மறைந்துள்ளனர். தேவன் நமக்கு கொடுத்துள்ள பணம், பட்டம், பதவி போன்ற அனைத்தையும் சுயத்திற்காக பயன்படுத்துகிறோமா அல்லது தேவனுக்காக பயன்படுத்துகிறோமா? உலகத்திற்காக பயன்படுத்தும் அனைத்தும் ஒரு நாளில் மறைந்து போகும். தேவனுக்காக சாதிப்பது மட்டுமே நிலைத்து நிற்கும்.

---

இது இன்றைய காலக்கட்டத்தில் வெளிவந்த தலைப்பு அல்ல, ஆனால் 1868 ஆம் ஆண்டில் நம்ம மெட்ராஸில் நடந்த ஒன்று. 'தி இந்தியன் மெடிக்கல் கெஜட்- ஏப்ரல் 1886 இதழில், 1860களில் மெட்ராஸ் பிரசிடென்சியில் காலராவினால் உயிர் இழந்தவர்களின் எண்ணிக்கை 2984 ஆக பதிவு செய்யப்பட்டுள்ளது. அன்றைய மெட்ராஸின் ஓரங்களில் இருந்த இடங்களான தண்டையார்பேட்டை, வண்ணாரப்பேட்டை, ராயபுரம் மற்றும் காசிமேடு ஆகியவை மிகவும் பாதிக்கப்பட்டன என்பதையும் இது குறிப்பிடுகிறது. காலரா தொற்றுநோயின் கொடூரமான அந்த காலத்தில்தான் ராயபுரத்தில் உள்ள ஒரு தேவாலயம் கிட்டத்தட்ட நான்கு ஆண்டுகளாக நோயுற்றவர்களுக்கு சேவை செய்யும் மருத்துவமனையாக மாறினது. இந்த செய்தி அந்த தேவாலயத்தின் 175 வது ஆண்டு புத்தகத்தில் டாக்டர் பி. தயானந்தன் மற்றும் அன்னி தயானந்தன் ஆகியோரால் குறிப்பிடப்பட்டு 2019 இல் வெளியிடப்பட்டது. இந்த தேவாலயம் சி.எஸ்.ஐ உலக மீட்பர் ஆலயம் என்று அழைக்கப்படுகிறது - ராயபுரத்தில் இன்றும் உள்ளது.

எடின்பர்க் மருத்துவ மிஷனரி சொசைட்டியின் டாக்டர் பேட்டர்சன் இந்த முயற்சிகளுக்கு பொறுப்பானவர். 'பிளாக் டவுன் மற்றும் ராயபுரத்தில் அவர் வைத்திருந்த இரண்டு மருந்தகங்களில் தினமும் சுமார் 120 நோயாளிகள் சிகிச்சைப் பெற்றனர், ஒரு வருடத்தில் 43000 நோயாளிகள் சிகிச்சை பெற்றனர்.' நோய்வாய்ப்பட்டவர்களுக்கு சேவை செய்வது ஒரு முதன்மை தேவையாகக் கருதப்பட்டது - அதற்காக தேவாலயம் கூட ஒரு மருத்துவமனையாக மாற்றப்பட்டது.

தேவாலய கட்டிடம் வெறும் புனித வழிபாட்டுத் தலமாக மட்டுமல்லாமல், நோயுற்றவர்களுக்கும் இறக்கும் நபர்களுக்கும் சேவை செய்யப் பயன்படும் கட்டிடமாகவும் அமைந்தது அற்புதம். 20ஆம் நூற்றாண்டில் பல தேவாலயங்கள், குறிப்பாக கிராமப்புறங்களில், கிறிஸ்தவர்கள் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் ஓரிரு மணி நேரங்கள் வழிபட்டு பின்னர் வெளியேறுவதற்கும் திரண்டு வரும் கட்டிடங்களாக இல்லை. மாறாக தேவாலயங்களில் முதன்மையாக பள்ளிகள், தங்குமிடங்கள், பெண்கள் தையல் வகுப்புகள், நூலகங்கள் மற்றும் கிளினிக்குகள் கூட இருந்தன. ஞாயிற்றுக்கிழமை இந்த கட்டிடங்கள் ஒரு தேவாலயமாகவும் செயல்படும். இயேசு கிறிஸ்த்துவின் போதனைக்கு இதுவல்லவா மிக இணக்கம்.

முதலாவது தேவாலயம் மக்களுக்கு சேவை செய்யும் இடமாகும் என்பதை நாம் மறந்துவிட்டோமா? தேவாலயங்கள் பாரம்பரிய வழிபாட்டுடன் மட்டும் மட்டுப்படுத்தப்பட வேண்டியதில்லை என்பதை இந்த கோவிட் 19 தொற்றுநோய் நமக்கு நினைவூட்டியுள்ளது. எளியோர்களுக்கும், ஒடுக்கப்பட்டவர்களுக்கும், தேவையுள்ளவர்களுக்கும் சேவை செய்வது வேதாகமத்தின்படி வழிபாடாகும். கொரோனா ஊரடங்கு காலத்தில் ஏழைகளின் துன்பத்தைத் தணிக்க பல தேவாலயங்கள் சிறு சிறு வழிகளில் உதவ முன்வந்ததில் நான் மகிழ்ச்சியடைகிறேன். இப்போது பல ஊரடங்கு கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டு வருகின்றன. இந்த நிலையில் நாம் தேவாலயம் என்றால் என்ன என்றுப் 'பழகிப்போன' சாதாரண வழிகளுக்கு திரும்பிச் செல்ல வேண்டுமா? அல்லது இந்த வாய்ப்பை நாம் சவாலாக எடுத்துச் சமுதாயத்தில் தேவாலயத்தின் பங்கை மீண்டும் சீராக அமைத்து, நமது நம்பிக்கையின் வெளிப்பாடாகவும் பயன்படுத்த வேண்டுமா? தேவாலயத்தின் கதவுகளைத் திறந்தெறிவோம், தேவாலயம் இனி வழிபாட்டுத் தலமாக மட்டுமே இருக்கக்கூடாது..

## ராயபுரத்தில் தேவாலயம் மருத்துவமனையாக மாறினது !!

ராயபுரத்தில் ஒரு நற்செய்தி புத்தகத்திலிருந்து

ரோடா அலெக்ஸ்
சென்னை



# ஜேக்கப் கணக்க

அருட்திரு.பேராசிரியர். மா. தேவராஜ்
நீலகிரி



## முதல் அருட்பொழிவுப் பெற்ற படுக ஆயர் மற்றும் படுக இலக்கியவாணர் மானவர்

நீலகிரி மாவட்டதில் படுகர் நடுவில் கிறிஸ்தவம் ஆழமாக வேர்க் கொள்ள கடவுள் பயன்படுத்திய மிக முக்கிய பாத்திரம் அருட்திரு ஜேக்கப் கணக்க என்றால் அது மிகையல்ல, இவர் நீலகிரி மாவட்டத்தில் காட்டேரி ஹட்டியில் நினைவில் வாழும் மாதய்யா மற்றும் கெப்பி அம்மா இணையினருக்கு 1847 ம் ஆண்டு அக்டோபர் மாதம் பிறந்தார் இவரது பெற்றோர் இவருக்கு “பசவா” என்றுப் பெயர் சூட்டி தாலாட்டி சீராட்டி வளர்த்தனர். அவர் அந்நாட்களில் தம் ஆரம்ப கல்வியை காட்டேரியில் இயங்கி வந்த பாசல் அருட்பணி சங்கத்தினரின் பள்ளியில் படித்தார். இவர் 1862 ம் ஆண்டு ஜூன் மாதம் 22ம் தேதி தமது 15 வது வயதில் இயேசு கிறிஸ்துவை தம் சொந்த மீட்பராகவும் ஆண்டவராகவும் ஏற்றுக் கொண்டு ஜேக்கப் கணக்க என்ற புதியப் பெயருடன் திருமுழுக்குப் பெற்றார். 1869ம் ஆண்டு தம் 22வது வயதில் முதல் படுக கிறிஸ்தவர் ஆபிரகாம் ஹாலய்யா அவர்களின் இரண்டாம் மகள் ‘கங்கி’ என்ற “மரியா”வை தம் வாழ்க்கைத் துணையாக கரம்பிடித்தார்.

கடவுளுடைய அழைப்பைப் பெற்றவுடன் உபதேசியராக (நற்செய்தியாளராக) பொறுப்பெடுத்திருந்தார். இந்நிலையில் கோத்தகிரியில் பாசல் அருட்பணிதளத்தின் அருட்பணியாளர் அருட்திரு. ஆதாம் பியூர் அவர்களின் உதவியாளராக 1867 ஆம் ஆண்டு முதல் பணியைத் தொடங்கி பல காலம் கோத்தகிரி பகுதியில் இவர்கள் இருவரும் மிகச் சிறப்பாக செய்தனர். வெற்றியுள்ள நல்ல நற்செய்தியாளராகவும், இலக்கியவாணராகவும் விளங்கினார்.

கோத்தகிரியில் அருட்பணியின் நற்செய்தியாளராகவும், அதே சமயத்தில் கோத்தகிரியில் இயங்கிவந்த அருட்பணியாளர்களின் பளளியின் உபாத்தியாயர் என்னும் ஆசிரியராகவும் பணியாற்றினார், இவர் அந் நாட்களிலேயே படுகு. தமிழ், கன்னட மற்றும் ஆங்கில மொழிகளில் நல்ல பண்டித்தியம் பெற்றிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இவர் படுகு, தமிழ் ஆகிய மொழிகளில் நல்ல அருளுரையாற்றும் திறன் பெற்றிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. இவரே படுக சமுதாயத்தில் முதல் அருட் பொழிவுப் பெற்ற ஆயாராவார்.

ஜேக்கப்கணக்கா அவர்களின் தனித்தன்மையை உணர்ந்த அந்நாளைய அருட்பணியாளர்கள் இவருக்கு 1887ம் ஆண்டு ஜூலைத் திங்களில் ஆயராக (திருச் சபையின் குருவானவராக) அருட்திரு ஜே நோபிளிக் அவர்கள் அருட்பொழிவுக் கொடுத்தார். இவர் நீலகிரி மாவட்டத்தின் பல இடங்களில் நற்செய்தியாளராகவும் அருட்பொழிவுக்குப் பின்னர் தேவாலய குருவானவராகவும் தம் திருப்பணியைச் சிறப்புடன் ஆற்றினார்.

இவர் ஓர் நல்ல கல்வியாளரும் கவி இயற்றும் திறன் கொண்டவராகவும் விளங்கினார். இவர் இயற்றியப் பாடல்கள் இன்று நம்மிடம் எதுவுமல்லாதிருப்பது மிகவும் வருத்தமளிக்கின்றது. இவர் படுகு மொழியில் எத்தனைப் பாடல்கள் இயற்றினார் என்பது சரியாக நமக்குத் தெரியவில்லை. ஆனால் ஓரிரு பாடல்களை சிலர் இன்று நினைவுக் கூறுகின்றனர். இருப்பினும் இவரால் இயற்றப் பட்ட ‘ சீயோன் ஹெண்ணுன கதை‘ (சீயோன் குமாரத்தியின் கீதம்) என்ற சிறப்பான நூல் 1684 ம் ஆண்டு ஜான் பனியன் அவர்களால் இயற்றப்பட்ட “மோட்சப் பிரயாணம்” (Pilgrim Progress) என்ற ஆங்கில புதினத்தின் இரண்டாம் பகுதியான “கிறிஸ்தியானாளின் விண்ணகப் பயணம்”என்ற நூலினை ஆதாரமாகக் கொண்டது. இதனை படுக மொழியின் “இரட்சண்ணிய யாத்திரீகம்” என்றால் அது மிகையாகாது என எண்ணுகிறேன், மட்டுமல்லாது படுக மொழியில் இயற்றப்பட்ட ஒரே காவியமெனவும் துணிந்துக் கூறுகின்றேன்.

மோட்சப் பிரயாணம் என்று நூல் தமிழில் உரைநடையில் மொழிபெயர்ப்புச் செய்யப்பட்டது, பின்னர் ஹெச். ஏ. கிருஷ்ணப்பிள்ளை அவர்களால் “இரட்சண்ணிய யாத்திரீகம்” என்ற காவியமாக தமிழில் வெளியிடப்பட்டது, இதில் எதை ஆதாரமாகக் கொண்டு இந்த அருமையான “ சீயோன் ஹெண்ணுன கதை” என்ற படுக காவியத்தை வடித்தார் எனத் தெரியவில்லை ஆனால் ஹெச். ஏ. கிருஷ்ணப்பிள்ளை அவர்களால் இயற்றப்பட்ட ‘இரட்சண்ணிய யாத்திரீகம்‘ படித்ததினால் ஏற்பட்ட தாக்கத்தினால் இந்நூலினை யாத்தாரோ என எண்ணத்துணிகிறேன். மிக அழகிய முதல் படுக கிறிஸ்தவ காவியத்தை வடித்த பெருமைக்குரியவராவார்.

“சீயோன் ஹெண்ணுன கதை” என்ற படுக காவியத்திற்கு திரு எ.ஏஸ் கௌடல் (A. S. Cowdell) அவர்கள் முன்னுரை எழுதி சிறப்பித்துள்ளார். இந் நூல் 30 பக்கங்களைக் கொண்டது, இந்நூல் மங்களூர் பாசல் அச்சகத்தில் அச்சடிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. இந் நூல் காலவெள்ளத்தில் கரைத்துப் போனதினால் இன்றைக்கு பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் (British Musiam) மட்டும் இதன் ஒரே ஒரு பிரதி மட்டும் பாதுகாக்கப்பட்டு வருகின்றது.

அருட்திரு. ஜேக்கப் கணக்கா அவர்கள் பல பாடல்களை இயற்றி இசையமைத்துள்ளார், ஆனல் அவைகள் ஏனோ மக்கள் பயன் பாட்டில் இல்லாமல் போனதாலோ என்னவோ அவைகளில் ஒன்றும் இன்றைக்கு (குடும்பத்தில் உள்ளவர்கள் உட்பட) யாருக்கும் தெரியாது. ஆனால் அவரது ஒரு பாடலின் ஒரு அடிமட்டும் ,

*“ஆறு கோலு கட்டிலேனா?*
*அக்கி ஆக்கி ஆடிலேனா?*
*மூறுக் கோலு கட்டிலேனா?*
*மண்டெ கூட்டி அத்தலேனா?*
*பாப்ப நெஞ்சு திருகதோலெ*
*பரிசுத்தவு ஆப்பதில்லெ”*



# வச்சிரமணி கிறிஸ்தியான் வழிவந்த செந்தமிழ் புலவர் மூவர்

ந. ஜான் ஜெயானந்தம்
சென்னை

'தமிழ் கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகளை மீண்டும் 21 நூற்றாண்டு தமிழ் உலகிற்கும், குறிப்பாக தமிழ் கிறிஸ்தவ பெருமக்களுக்கும் எடுத்து இயம்ப ஓர் வாய்ப்பு கிடைத்தமைக்கு நான் நமது ஆண்டவர் கிறிஸ்து இயேசுவின் மூலம் இறை தந்தையாம் கடவுளை வணங்குகிறேன்.

தலைப்பில் காண்கிற ஓர் குடும்பத்தைச் சார்ந்த மூன்று முத்தமிழ் இறைப்பணிக் கவிமணிகளின் வாழ்க்கையைச் சுருங்கக் கூறி, அவர்கள் நமக்கு விட்டுச் சென்ற பெருஞ்செல்வமாம் தமிழ் இலக்கிய படைப்புகளை இந்த தொடர் கட்டுரைகளின் மூலம் தெரிவிப்பதே எனது ஆவல். பரந்து விரிந்து பெருகியிருக்கும் இக்குடும்பத்தில் நான் ஒருவனாக இருக்கும் நோக்கில் அல்ல, நம் அனைவரின் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் திருப்பெயர் மாட்சிமையுற்று, இப்பெரும் விசுவாச தந்தைமார்கள் இயற்றிக் கொடுத்துள்ள செந்தமிழ் இலக்கிய பொக்கிஷத்தை இன்றைய தமிழ் சமுதாயத்திற்கு அறிமுகப்படுத்துவதே எனது நோக்காக இருக்கிறது. தமிழ்க் கிறித்தவ இலக்கியத்தில் முன்னோடிகளாக இருப்பவர்கள் தஞ்சை வேதநாயகம் சாஸ்திரியாரும். எச். ஏ. கிருட்டிணப் பிள்ளையும் ஆவர். இவர்கள் தனித்தவர்களாக பெருங்காப்பியங்களைப் படைத்து புகழ்பெற்றுள்ளனர். ஆயின், இவர்கள் இன்றி தமிழ்க் கிறித்தவப் புலவர்கள் பெரும் பான்மையோரும் உள்ளனர். முனைவர் சூ. இன்னாசி படைத்த 'கவிதைச் செல்வம் ' (சென்னைப் பல்கலைக் கழகம், 1989) என்ற நூலில் 24 வகையான தமிழ் இலக்கிய வகைகளில் 471 நூல்கள் படைக்கப்பட்டுள்ளதைக் குறிப்பிட்டு, அவைகளை இயற்றிய ஆசிரியர்களின் பெயர்களுடன் சில சுருக்கமான விவரங்களையும் எழுதியுள்ளார். இப்புள்ளி விவரம் தமிழ்க் கிறித்தவ மரபுக் கவிதைப் படைப்புகளின் செழுமையை எடுத்துரைக்கும்.

மேற்கண்ட புள்ளிவிவர நூலில் இக்கட்டுரையில் விவரித்துள்ள முப்பெரும் புலவர்களின் ஆக்கங்கள் சேர்க்கப்படவில்லை. இவை இதுவரை புதைந்தே இருந்து விட்டன. இவர்களுடைய படைப்புகளில் காணும் ஒரு சில சிறப்புகளை எடுத்துரைக்கும் வகையில் இக்கட்டுரை அமைந்துள்ளது. முதலில் இம்மூவரின் வாழ்க்கையை சுருங்கக் கண்டு, பின்னர் அவர்கள் ஆற்றிய படைப்புகளைக் காணலாம்.

"ஒரு குடும்பத்தைச் சார்ந்த மூவர்"

சீர்பெருமை பெற்றுத் தமிழ் மணங்கமழும் திருத்தென்பாண்டி நாடாகிய திருநெல்வேலியில் உள்ள திருச்செந்தூர் வட்டத்தில், தேரிவிளை என்னும் சிற்றூரில் பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்து வந்த நல்லணைந்த பெருமாள் வழியில் தோன்றியவர் வச்சிரமணி சீமான் ஆவர். இவர் தமது குலதெய்வ ஆலயத்தில் பூசாரியாகவும் இருந்தார். பின்னர் இறைமகன் கிறிஸ்து பெருமானை பற்றி அறியலுற்று, தன்னார்வம் மிக்க தீர்மானத்துடன் கிறிஸ்தவரானார். இவருடைய வழித்தோன்றல்களான சி.பி. ஞானமணி (1868- 1922), சி.டி. ஞானமணி (1890-1953), மூவரும் இறைப்பற்றுடன், இசை ஞானமும், தமிழ்ப் புலமையும் உடையோராவர். இவர்கள் தென் தமிழ்நாடு, இலங்கையில் உள்ள யாழ்ப்பாணம், சிங்கப்பூர், மலேசியா ஆகிய இடங்களில் சமயத்தொண்டு, கல்வித் தொண்டு, இலக்கிய இலக்கணத் தொண்டாற்றியுள்ளனர்.

இம்மூவரில் ஒருவராகிய அருள்திரு. சி. தேவதா ஞானமணி (1890-1953) தமது 'கிறிஸ்துகுலக் கும்பி' என்னும் பனுவலில் கூறியுள்ள முதல் இரு அடிகள் இக்கிறிஸ்தியான் வழிமுறையாருக்கு மிகப் பொருந்தும்:

*எங்கள் குலம் ஞானமிகுங் கிறிஸ்துகுல மம்மே!*
*எங்களுக்குச் சரிகுலங்க ளெங்குமில்லை யம்மே!*

"அன்பே பிரதானம்' கீர்த்தனைப் புகழ் சி. பரமசகாயம் ஞானமணி அவர்கள், இன்றைய நெல்லை மாவட்டத்தில் உள்ள கிருபாபுரம் என்ற இடத்தில் 1868-ஆம் ஆண்டு மே மாதம் 29-ஆம் நாள் வச்சிரமணி கிறிஸ்தியான் அவர்களுக்கு மகனாகப் பிறந்தார். பல சபைகளில் ஆயர் பணியாற்றி 1922-ஆம் ஆண்டில் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள். இவர் ஆயராவதற்கு முன்னர் உதகமண்டலத்தில் உள்ள கெய்ட்டியில் அமைந்திருந்த பேசில் மிஷன் பயிற்சிப் பள்ளியில் தமிழாசியராக பணியாற்றியுள்ளார்.

சங்கை சி. தேவதா ஞானமணி என்னும் நற்பெயர் பெற்றுள்ள இவர், சங்கை சி. பரமசகாயம் ஞானமணி என்பாரின் தலைமகனாவார். இவர் தேவ அழைப்புடன் இங்கிலாந்துத் திருச்சபையைச் சார்ந்த எஸ். பி. ஜி. மிஷன் அமைப்பின் கீழ் குருப்பட்டம் பெற்று, 1923-ஆம் ஆண்டு தாம் பிறந்து வளர்ந்த தமிழ் மண்ணை விட்டுச் சிங்கப்பூர், மலாக்கா, மலேயா (இப்பொழுது

மலேசியா) சென்று, தம் வாழ்க்கை முழுவதையும் இறைப்பணியில் ஈடுபடுத்திக் கடுமையாக உழைத்தார். இவர் சிங்கப்பூர் டார்செட் சாலையில் அமைந்துள்ள கிறிஸ்துநாதர் ஆலயத்தை நிறுவினவராவார்.

சங்கை பி.எ. பீற்றர் அவர்கள் பழைய நெல்லை மாவட்டத்தைச் சார்ந்த முதலூரை (முதல் கிறிஸ்தவ ஊர்) அடுத்த, சுப்பிரமணியபுரம் எனப்பட்ட கண்காணியார்புரம் என்ற சிற்றூரில் (இன்று இவ்வூர் தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ளது.) பரஞ்சோதி என்ற சீமானுக்கு இரண்டாவது மகனாக 1864-ஆம் ஆண்டுப் பிறந்தார். இவர் வச்சிரமணி கிறிஸ்தியானின் மகள் லிதியாள் அம்மையாரைத் (சங்கை சி.பி. ஞானமணி அவர்களின் தமக்கை) திருமணம் செய்திருந்தார். இவர் 1902 முதல் 1906 வரை நாசரேத்தில் அமைந்திருக்கும் பெண்கள் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியின் தலைமை ஆசிரியராகவும், பின்னர் தூத்துக்குடி, நாசரேத்து, இடையன்குடி, புதியம்புத்தூர், கடையனோடை, சேர்வைக்காரன் மடம் ஆகிய ஆலயங்களில் ஆயராகவும் பணியாற்றியுள்ளார்.

“பாரம்பரிய வரலாறு”

தமிழ்நாட்டின் பெருமை தென்கோடியில் அமைந்துள்ள திருச்செந்தூர் வட்டத்தில், தேரிவிளை என்னும் சிற்றூர் இருந்தது. அவ்வூரில் பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வல்லணைந்த பெருமாள் என்ற பெயர் கொண்ட சிவ பக்தர் ஒருவர் வாழ்ந்து வந்தார். இவருக்கு முத்தயம் பெருமாள், மாரப்பெருமாள் என இரண்டு குமாரர்கள் இருந்தனர். நல்லணைந்த பெருமாளுக்கு தேரிவிளையில் அதிகமான நிலபுலன்களும், திரளான ஆடுமாடுகளும் இருந்தன. அவர் பெருந்தனவந்தர்; அவர் நற்பெயருடன், புகழ்பெற்று வாழ்ந்து வந்தார். அவருக்கிருந்த ஆடு மாடுகளின் பெருக்கம் ஏராளம்.

தேரிவிளைப் பகுதியில் நீர்ப்பாசன வசதியுள்ள நெல் வயல்கள் மிகுதியாக இல்லை. ‘எப்பயிர் செய்யினும் நெற்பயிர் செய்‘ என்று அந்நாட்களில் நிலவிய நற்சொல்லுக்கேற்ப, 1760-இல் நல்லணைந்த பெருமாள் குடும்பம், அவ்வூரை விட்டுப் பெயர்ந்து காம்மடிக் கோட்டைக்கருகில் உள்ள சொக்கன் குடியிருப்புக்கு மேற்கே குடியேறினர். ஆனால் சில ஆண்டுகளுக்குள் அருகில் இருந்த தருவைக்குளத்தில், பருவ காலங்களில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடினமையால், முத்தையம் பெருமாள் உயர்ந்த பூமியாயிருந்த அனுக்கிரகபுரத்திலும், மாரப்பெருமாள் உயரத்துக் குடியிருப்பிலும் குடியேறினர் (இவ்வூர் ‘உசரத்துக் குடியிருப்பு’ என்று இன்றும் பொதுவாக வழக்கில் உள்ளது). இப்பகுதிகளில் அவர்களுக்குப் பருத்தி, ஆமணக்கு விளையும் புன்செய் நிலங்களும், நெற்பயிரிடும் நன்செய் வயல்களும் மிகுதியாக இருந்ததென்பதற்கு நவாப் அரசன் ஆண்ட காலத்திய முத்திரை வைத்துள்ள ஓலை முடியொன்று, உயரத்துக் குடியிருப்பில் பின்னர் கண்டெடுக்கப்பட்டது.

மாரப்பெருமாளுக்கு இரண்டு புதல்வர் இருந்தனர். இவர்களில் மூத்தவர் மாசிலாமணி என்பாரும், இளையவர் செம்புலிங்கமும் ஆவர். செம்புலிங்கத்தின் மூத்த குமாரரின் பெயர் சிதம்பரம். இளையவர் வச்சிரமணி ஆவர்.

தொடரும்..

# கிறிஸ்தவ ஆராய்ச்சியாளர்களுக்கு ஒரு நற்செய்தி

காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோத்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர். அவரின் பெயர் தாங்கிய நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்

ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் முதல் நூலகம் இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல் கல்லாகவும் அமையும் மற்றும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தார்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் ஏற்படுத்தப்பட்டுள்ளது.

library.tchsportal.co.in




Facebook @christianhistorical

தமிழ் கிறிஸ்தவத்தின் முதல் மின்னனு நூலகத்தில் அரும் பெரும் பொக்கிஷங்கள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. மிஷனரிகள் எழுதிய புத்தகங்கள்,பழைமையான திருச்சபை சார்ந்த வரலாற்று ஆவணங்கள்,தமிழ் கிறிஸ்தவ கவிஞர்களின் வரலாறுகள், கிறிஸ்தவ காப்பியங்கள் அனைத்தும் வரிசைப்படியாக கொடுக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவத்தின் பொக்கிஷங்களை தேடி அலைய வேண்டாம் என்ற நோக்கத்தில் கையடக்கமாகவும் கையில் அடங்கும் நோக்கத்திலும் எந்நேரமும் எந்த வேளையிலும் எளிதாக தமிழ் கிறிஸ்தவ எதிர்கால திட்டத்தில் அனைத்து வடிவங்களிலும் நமது ஆராய்ச்சி நூலகத்தை நீங்கள் பயன்படுத்தலாம்.

தமிழ் புத்தக வரலாற்றில் இல்லாததை தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் லாப நோக்கம் இல்லாமல் ஆயிரக்கணக்கான புத்தகங்களையும் ஆய்வு நூல்களையும், வரலாற்று பொக்கிஷங்களையும் சுமந்து கொண்டு தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் அடுத்த மைல் கல்லை உருவாக்க வேண்டும் என்ற நோக்கத்தில் இறையியல் மாணவர்களுக்காகவும், எழுத்தாளர்களுக்காகவும் மாத கணக்கிலும் ஆண்டு கணக்கிலும் தொடர்ந்து சேவையை கொடுக்கவும் வரலாற்று சங்கம் திட்டத்தை கொண்டு வந்துள்ளது.



# இருளிருந்து வெளிச்சத்தை நோக்கி வந்த வடகிழக்கு இந்திய மக்கள்

## 1901 முதல் 2011 வரை

J. ஜான் ஞானராஜ்
கல்லிடைக்குறிச்சி

வட கிழக்கு இந்திய மாநிலங்கள் என அஸ்ஸாம், திரிபுரா, சிக்கிம், மேகாலயா, மிசோரம், மணிப்பூர், நாகாலாந்து, அருணாச்சல பிரதேசம் ஆகியவை குறிப்பிடப்படுகிறது. மேற்கண்ட மாநிலங்களில் கடந்த 60 ஆண்டுகளில் பெரும் வளர்ச்சியை கிறிஸ்தவம் பெற்றுள்ளது இதுகுறித்த புள்ளிவிபரங்களை அறிகிற பொழுது நமக்கு பெரும் மலைப்பாக இருக்கிறது. இருளிலிருந்து வெளிச்சத்தை நோக்கி உலகின் ஒளியாம் ஆண்டவர் இயேசு கிறிஸ்துவை தங்களது சொந்த ஆண்டவராக ஏற்றுக்கொண்ட வடகிழக்கு இந்தியா குறித்து நாம் காண்போம்.

2011 இந்திய மக்கள் தொகை கணக்கெடுப்பு படி இந்தியாவில் உள்ள மொத்த கிறிஸ்தவர்கள் 2.78 கோடி இதில் 1.1 கோடி மக்கள் தமிழ்நாடு மற்றும் கேரளாவைச் சார்ந்தவர்கள். இதற்கு அடுத்து 78 லட்சம் கிறிஸ்தவர்கள் வடகிழக்கு இந்திய மாநிலங்களில் வாழ்கிறார்கள். இவர்கள் இந்தியாவிலுள்ள கிறிஸ்தவர்களில் 28 சதவீதத்தினர். அந்தமான் மற்றும் நிக்கோபார் ஆகிய இரு தீவுகளும் இணைந்த நிலையில் அங்குள்ள மக்களில் 21.3 சதவீதத்தினர் கிறிஸ்தவர்கள். நிக்கோபார் தீவில் மட்டும் என கணக்கில் எடுத்துக் கொண்டால் 71 சதவீதத்தினர் கிறிஸ்தவர்கள். ஜார்க்கண்ட் சட்டீஸ்கர் ஒரிசா ஆகிய மூன்று மாநிலங்களை கொண்ட மத்திய இந்திய பகுதியில் 37 லட்சம் கிறிஸ்தவர்கள் உள்ளனர். இந்திய சுதந்திரத்திற்கு பின்பு ஏற்பட்ட மாபெரும் மக்கள் திரள் மனமாற்றம் கும்பல் இயக்கம் இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் (கும்பல் இயக்கம்) வட கிழக்கு இந்திய மாநிலங்களில் நடைபெற்றுள்ளதை நாம் பார்க்க முடிகிறது.

வடகிழக்கு இந்திய மாநிலங்களில் அதிகமாக நற்செய்தி பணியாற்றியவர்கள் அமெரிக்க பாப்திஸ்து சபை மிஷனரிகள் ஆவர். வடகிழக்கு இந்திய மாநிலங்களில் உள்ள பழங்குடி மக்களில் பெரும்பாலானோர் உலகின் ஒளியாம் இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டு விட்டார்கள். வடகிழக்கு இந்திய மாநிலங்களில் உள்ள புள்ளி விபரங்களை நாம் எடுத்துக் கொள்வோம். அசாம், திரிபுரா ஆகிய மாநிலங்கள் இணைந்த வடகிழக்கு இந்தியா அசாம், திரிபுரா ஆகிய மாநிலங்கள் இணைந்த வடகிழக்கு இந்தியா என நாம் பார்த்தால் 1901 மக்கள் தொகை கணக்கெடுப்பு படி இங்கு கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை 0. 83 சதவீதம் 1921 மக்கள் தொகை கணக்கெடுப்புப்படி இங்கு கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை 2.68 சதவீதம் 1951இல் இந்த நிலை 3 மடங்காக மாறுகிறது. ஆண்டுவாரியாக கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை சதவீதத்தில் 1901 இல் 0.83 சதவீதம், 1921 இல் 2.68 சதவீதம், 1951 இல் 6.42 சதவீதம், 2011 இல் 16.94 சதவீதம் அஸ்ஸாம், திரிபுரா மாநிலங்கள் தவிர்த்த வடகிழக்கு இந்தியா அசாம், திரிபுரா மாநிலங்கள் தவிர்த்த வடகிழக்கு இந்தியாவில் இதே நேரத்தில் புள்ளிவிபர கணக்கீட்டை நாம் பார்க்கும் பொழுது வடகிழக்கு இந்திய கிறிஸ்தவர்களின் மக்கள்தொகை பன்மடங்கு உயர்ந்துள்ளது.

ஆண்டுவாரியாக கிறிஸ்தவர்களின் மக்கள்தொகை சதவீதத்தில் 1901 இல் 2.68.சதவீதம், 1921 இல் 8.39 சதவீதம், 1951 இல் 31.00சதவீதம், 2011 இல் 68.42 சதவீதம், வடகிழக்கு மாநிலங்கள் - தனித்தனியாக ஒரு பார்வை

**கீழ்க்கண்ட மாநிலத்தில் ஆண்டுவாரியாக கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை சதவீதத்தில்**

1.அசாம் 1901 இல் 0.41 சதவீதம், 1921 இல் 0.90 சதவீதம், 1951 இல் 2.00 சதவீதம், 2011 இல் 3.74 சதவீதம்.

2. திரிபுரா 1901 இல் 0.08 சதவீதம், 1921 இல் 0.61 சதவீதம், 1951 இல் 0.82 சதவீதம்,2011 இல் 4.35 சதவீதம்

3. மேகாலயா 1901 இல் 6.16 சதவீதம், 1921 இல் 11.54 சதவீதம், 1951 இல் 24.87 சதவீதம், 2011 இல் 74.59 சதவீதம்.

4.மிசோரம் 1901 இல் 0.05 சதவீதம், 1921 இல் 28.17 சதவீதம், 1951 இல் 90.50 சதவீதம், 2011 இல் 87.16 சதவீதம்.

5.மணிப்பூர் 1901 இல் 0.01 சதவீதம், 1921 இல் 2.00 சதவீதம், 1951 இல் 12.00 சதவீதம், 2011 இல் 41.00 சதவீதம்.

6. நாகாலாந்து 1901 இல் 0.59 சதவீதம், 1921 இல் 5.50 சதவீதம், 1951 இல் 46.05 சதவீதம், 2011 இல் 87.93 சதவீதம்.

7. சிக்கிம் 1901 இல் 0.23 சதவீதம், 1921 இல் 0.46 சதவீதம், 1951 இல் 0.22 சதவீதம், 2011 இல் 9.91சதவீதம்.

8.அருணாச்சல பிரதேசம் 1921 இல் 0.01 சதவீதம், 1971 இல் 0.79 சதவீதம், 1991 இல் 10.30சதவீதம், 2011 இல் 30.26சதவீதம்.

வடகிழக்கு இந்திய மாநிலங்களை போல இந்தியா முழுவதிலும் உள்ள மக்கள் இருளிலிருந்து வெளிச்சத்தை நோக்கி வந்து ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொள்ள ஜெபிப்போம் செயல்படுவோம்.

# வரலாற்று செய்திகள்


ரேனியஸ் ஐயரின் பிறந்தநாள் அன்று வரலாற்று சங்கம் சார்பாக மலர் வளையம் வைக்கப்பட்டது


நம் மாத பத்திரிக்கையை ஈரோடு பகுதியில் அறிமுகபடுத்தியபோது


நம் மாத பத்திரிக்கையை சேலம் பகுதியில் அறிமுகபடுத்தியபோது


நம் மாத பத்திரிக்கையை சேலம் பகுதியில் அறிமுகபடுத்தியபோது


மைக்கேல் அவர்களுடன்



குளோரிந்தா ஆலயத்தில் நம் பத்திரிகை



# கிறிஸ்துமஸ் பாடல் பிறந்த கதை

இலாசரஸ் செல்வநாதன்
காட்பாடி

அரசனைக் காணாமலிருப்போமோ? - நமது
ஆயுளை வீணாகக் கழிப்போமோ?

**அனுபல்லவி**

பரம்பரை ஞானத்தைப் பழிப்போமோ? - யூதர்
பாடனு பாவங்களை ஒழிப்போமோ? - யூத

**சரணம்**

யாக்கோபிலோர் வெள்ளி உதிக்குமென்றே, - இஸ்ரேல்
ராஜ செங்கோலெங்கும் கதிக்குமென்றே,
ஆக்கமிழந்து மறுவாக்குரைத்த பாலாம்
தீர்க்கன் மொழிபொய்யாத பாக்கிமே ! - யூத - அர

**ஆசிரியர் குறிப்பு:**

அருள்திரு. ஜார்ஜ் சே. வேதநாயகம் (1868 1932) மதுரை தோத்தம்பட்டி கிராமம் சோலைமலை - கருப்பாயி தம்பதியின் மகன் நாகையா இவர் முன்னோர் அரசரின் பாதுகாவலர் என்பதால் சேர்வைக்காரர் எனப்பட்டனர். வாஷ்பான் போதகர் வளர்ப்பில் 12 வயதில் கிறிஸ்தவராகி இப்பெயர் பெற்றார். சாண்டரின் வளர்ப்பு மகளை மணந்து, இருவரும் அஞ்ஞானத்திலிருந்து விடுபட்ட அனாதைகள் என இருவரும் சேர்ந்து பாடி நற்செய்தி கூறுவர். 1930 ல் மனைவி மரித்தார். சென்னையில் பணியாற்றியவர், சபை மூப்பர்களால் துன்பப்பட்டவர். பொய் வழக்குகளால் புண்பட்டவர். அரக்கோணத்தில் இவர் வீட்டை கொள்ளையடித்து வண்டி மாட்டைக் கொன்று இவரின் சபை சந்திப்புகளை தடை செய்தனர். கொலை செய்வார்கள் என பயந்து இடமாற்றம் கேட்டு பெற்றார். இச்சூழ்நிலையில் நொந்தழுது இப்பாட்டை மனைவியிடம் கொடுத்து ஜெபிக்கச் செய்தார்.

தன் பேரன் இம்மானுவேல் எபினேசர் சென்னை, கல்கத்தா பேராலயங்களின் ஆயர். மெட்ரிகுலேஷன் முடித்து 3 வருட இறையியல் கற்று சென்னை சூளை அந்திரேயாவில் 25 ஆண்டுகள் போதகர். 11 நூற்கள், 383 பாடல்கள், 13 CLS - இல் உள் சபையில் துன்பம், பொய் வழக்குகள், வீடு, மாடு கொள்ளை, கொலை மிரட்டல், அடிக்கடி இடமாற்றம் ஆகியவற்றால் துன்புற்றவர். அமெரிக்கன் மிஷன் ஊழியர், உபதேசி, போதகர், முனிஷி, பத்ராததிபர், ஆசிரியர், கீர்த்தனைக் கவிஞர் இக்குறிப்புகள் திருப்பத்தூர் சவரிராயனார் மூலம் பெறப்பட்டது.

**பாடற்குறிப்பு :**

அரசன் என இயேசுவை முக்கியப்படுத்தி, பெத்தலையில் பிறந்தவரை காணாது நாட்களைக் கழிப்பதா. ( பரம்பரை ஞானம் ) யூதர் எதிர்பார்த்த மேசியாவின் வருகை, அதுவரை இஸ்ரவேலர் அனுபவித்த துயரங்கள் எனும் (ஞானம்) உணர்வை மேசியாவாகிய அரசன் யாக்கோபில் ஓர் வெள்ளி உதிக்கும், பீலேயாம் தீர்க்கன் மோவாபியனாகிய பாலாக் அரசனுக்கு உரைத்தது நிறைவேறிற்று (எண். 24: 17). ஆக்கமிழந்து என் வீடு நிறைய பொன்னும் வெள்ளியும் கொடுத்தாலும் எதிராய் வாக்களியேன் ( எண் . 24 : 12 ) என்றும், ( பாக்கியமே ) கிறிஸ்து பிறந்தது என்கிறார். ஏனைய சரணங்களில் காணிக்கைகளுடன் நட்சத்திரம் காட்டியபடி தொழுவத்தில் அரசனைக் கண்டார்கள்.

அருள்திரு.G.P ராஜா
சாட்சியாபுரம்

# ராவ் பகதூர் கிரப் ஐயர்

## அவர்களின் வாழ்க்கை வரலாறு

கிரப் அவர்களுடைய தகப்பனார் பெரியகருப்பன் என்ற சுவிசேஷமுத்து அன்றைய விருதுபட்டி(விருதுநகர்) பகுதி பேரூரை ஊருக்கு அருகிலுள்ள ஒரு பட்டி என்னும் சிற்றூரில் பெரியண்ணா என்பவருக்கு மகனாக பிறந்தவர். இவருக்கு ஒரு சகோதரர் உண்டு. இவர்கள் சிறு வயதாகயிருக்கும் போதே தகப்பனார் மரித்துவிட்டார். 'இவர் எட்டாவது படிக்கும்போது பிழைப்புக்காக தன்னுடைய தாயார் சிவகாசி பட்டணத்திற்கு வந்து விட்டார்கள். இவர்கள் குடும்பம் தலைமுறை தலைமுறையாக கோவில் பூசாரியாகயிருந்து வந்தார்கள். இவரும் மாரியம்மன் கோவிலில் பூசாரியாக பூசை தொழிலை செய்து வந்தார்கள். இவருடைய மாமனார் அவர்கள் பெரியகருப்பன் என்ற சுவிசேஷமுத்துவின் படிப்பின் ஆர்வம் கண்டு உயர்தரக்கல்விக்கு மேல்படிப்பை படிக்க பளையங்கோட்டையிலுள்ள சி.எம்.எஸ்.உயர்நிலைப்பள்ளியில் படிக்க வைத்தார். படிக்கும்போதே ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டார். இவர் தன்னுடைய பெயரை சுவிசேஷமுத்து என்று ஷாப்டர் ஐயரவர்களால் திருமுழுக்கு பெற்று கிறிஸ்தவ பக்தனாக மாறினார். சுவிசேஷமுத்து மேல் படிப்பையும், ஆசிரியர் பயிற்சியையும் முடித்து சாட்சியாபுரம் சி.எம்.எஸ். இடைநிலைப்பள்ளியில் தலைமையாசிரியராக பணிபுரிந்தார். இவருடைய கல்வி பணியுடன் இணைந்து இறைப்பணியையும் செய்து வந்தார். இவருடைய கல்வி பணி 1879 - 1912 வரை அநேக பிள்ளைகளை கல்வியில் உயர்த்தினார். இவரிடம் கல்வி பயின்றவர்கள் அநேகர் ஆசிரியராக, மருத்துவராக, தொழில் முதலாளியாக, காவலாளராக என்று பல துறைகளில் பணியில் இருந்தார்கள் என்பது குறிப்பிடதக்கது.

தலைமை ஆசிரியர் திரு.சுவிசேஷமுத்து அவர்கள் குடும்பம் மிகப்பெரிய குடும்பம். இவருக்கு பத்து பிள்ளைகள் பிறந்தார்கள். அருள்திரு.எஸ்.ஜி.கிரப் ஐயர் அவர்கள் ஆறாவது மகனாக 1890ஆம் ஆண்டு மார்ச் மாதம் 15ம் தேதி பிறந்தார். - இளமையிலே கல்வி ஆர்வம் கொண்டவராய் காணப்பட்டார். எட்டாம் வகுப்பு வரை சாட்சியாபுரம் CMS இடைநிலைப்பள்ளியில் படித்து முடித்தார். அதன்பிறகு உயர்நிலை கல்விக்காக பாளையங்கோட்டை CMS உயர்நிலைப்பள்ளியில் படித்தார்.'

உயர்நிலை கல்வியில் நல்ல தேர்ச்சி பெற்ற பிறகு மேல் படிப்புக்காக சென்னையிலுள்ள கிறிஸ்தவக் கல்லூரியில் இளம் பட்டம் பெற்றார்(BA). தட்டெழுத்துப் பயிற்சியும் பெற்றார். வருமான (ரெவின்யூ) துறையில் எழுத்தாளராகத் தன் வாழ்க்கை பணியை 1914ல் ஆரம்பித்தார். இவருடைய பணியில் உண்மையும், நேர்மையும் காணப்பட்டதால் திருநெல்வேலி ஆங்கிலேயர் கலெக்டர் அவர்களுக்கு உதவியாக பணி செய்தார். இவர் வெளிநாடு சென்றபின் கிரப் அவர்களை தாசில்தாராக நியமித்து சென்றார். 'இவருக்கு 1915ஆம் ஆண்டு கோவில்பட்டி வட்டார குருவாகயிருந்த அருள்திரு.மதுரம் அவர்களுடைய மகள் குஜயின் மதுரம் அவர்களை திருமணம் செய்து கொண்டார். இவருடைய மனைவி (B.A.,B.Ed) பட்டம் பெற்றவர். இவருக்கு ஒரு மகன் பிறந்தார். கொஞ்ச நாட்களில் கிரப் மனைவி இறந்துவிட்டார். சில நாட்களுக்கு பிறகு இரண்டாவது திருமணம் செய்துகொண்டார். இவர் கடவுளுடைய கிருபையினாலும், மக்களுடைய தயவினாலும் நல்ல நிலைமைக்கு உயர்த்தப்பட்டு மாவட்ட கலெக்டராக ஆந்திர மாநிலம் நெல்லூரில் 1930ம் ஆண்டு நியமிக்கப்பட்டார். அதற்கு முன்பு உதவி கலெக்டராக 1929ல் பணி செய்தார். 1933ல் மதுரை மாவட்டம் மேலூரில் உதவி ஆட்சி தலைவராய் நியமனம் செய்யப்பட்டார். 1935ல் தஞ்சையில் கூடுதல் மாவட்ட மாஜிஸ்ட்ரேட் ஆகவும், மாவட்ட ஆட்சியாரின் நேர்முக



உதவியாளராகவும் பணியாற்றினார். அதன்பின்பு மாயவரம் ஆட்சியாளராக பணியாற்றினார். அந்த சமயம் இவருக்கு ராவ் பகதூர் என்ற சிறப்பு பட்டம் கொடுக்கப்பட்டது. 1938ஆம் ஆண்டு நாகையில் துணை ஆட்சியாளராக பணியாற்றினார். பதவியிலும், உணவு பங்கீட்டு அதிகாரியாக இந்தியப் பொதுச்சேவைப் பணி ஆணைக்குழு உறுப்பினராகவும் பணியை செய்து 1952 ஆம் ஆண்டு மார்ச் மாதம் ஓய்வு பெற்றார்.'

அரசுப்பணி புரிந்த காலங்களிலும் சமயம் கிடைக்கும்போது நற்செய்திப்பணியும் செய்ய தவறவில்லை. இவருடைய தகப்பனாருக்கு கிரப் ஒரு அருட்பணியாளராக மாறவேண்டும் என்ற விருப்பம். அவருடைய தந்தையின் விருப்பம் அவர் ஓய்வு பெற்ற பின்புதான் நிறைவேறியது.

கிரப் அவர்கள் மத்திய அரசுப் பணியிலிருந்து 1952 ஆம் ஆண்டு ஓய்வு பெற்றபின் பல திருச்சபைகளில் தன்னார்வமாக சபை குருவானவர்களுக்கு உதவி செய்வதில் நல்ல ஆர்வம் கொண்டவராக திகழ்ந்தார். கொடைக்கானலில் தன் மனைவியுடன் தன்னுடைய பங்களாவில் வசித்து வந்தார். கொடைக்கானலில் ஆங்கில மொழியில் பிரசங்கம் செய்வதிலும், மொழி பெயர்த்து கூறுவதிலும் நல்ல திறமைபடைத்தவராக திகழ்ந்தார். இதைக்கண்ட சபை மக்கள் அத்தியட்ச்சரிடம் இவருடைய ஊழிய வாஞ்சைகருத்தில் கொண்டு போதகராக பணி செய்ய அறைக்கூவல் விடுத்தார்கள். இதனால் 1953ல் திருமறையூரில் ஆறு மாதம் இறையியல் பயிற்சி பெற்றார். உடனே இராஜபாளையத்தில் போதகர் பணிக்கு அமர்த்தினார் நியூபிகின் பேராயர் அவர்கள்.'

அருள்திரு.கிரப் அவர்கள் 1953 ஆம் ஆண்டு மார்ச் 27ம் தேதி மதுரை ரோட்டில் அமைந்திருக்கும் தூய மாற்கு ஆலயம், இராஜபாளையம் குருசேகரத்தில் உதவி குருவாக நியமனம் பெற்றார்.' குருமனை இல்லாததால் மிகவும் கஷ்டப்பட்டார். அதனால் இராஜபாளையம் குருமனையை விடா முயற்சியினால் தன்னுடைய சொந்த பணத்தை செலவழித்து கட்டி முடித்தார்., ஆலயம் புதுப்பித்தல் மற்றும் சோமையாபுரம், தேசிகாபுரம், நக்கனேரி, முதுகுடி, வெங்காநல்லூர், சிதம்பராபுரம், சோழபுரம் ஆகிய இடங்களிலுள்ள பள்ளி, ஆலயம் போன்ற நில அளவீடுகளை சர்வே துறையில் உரிய பதிவேடுகள் பெற்று பாதுகாத்து வைத்தார். அனைத்து கட்டிடங்கள் எல்லாம் இவரது முயற்சியால் கட்டப்பட்டது. சபைகளின் வளர்ச்சிக்கென்று ஞாயிறு பள்ளிகள், வேத ஆராய்ச்சி வகுப்புகள், சபை சந்திப்புகள், ஆவிக்குரிய கூட்டங்கள் ஆகியவற்றைத் திறன்பட செய்து முடித்தார்.'

1954ம் ஆண்டு திருவில்லிப்புத்தூர் சி.எம்.எஸ் ஆண்கள் உயர்நிலைப்பள்ளியில் நிர்வாகியாக நியமனம் செய்யப்பட்டார். இந்த பள்ளி 1856ல் மெடோஸ் அவர்களால் சாட்சியாபுரத்தில் துவங்கப்பட்டது. பின்பு 1934ல் அப்பள்ளி திருவில்லிப்புத்தூர்க்கு மாற்றம் செய்யப்பட்டது. இப்பள்ளியை நல்ல திறன்பட வளர்ச்சி பாதையில் கொண்டு வந்தார். ஆகவே இப்பள்ளி 1957ம் ஆண்டு நூற்றாண்டை கண்டது. இதனால் கிரப் ஐயர் அவர்கள் "நூற்றாண்டு நினைவு கட்டிட கலைஞர்" என்று பாராட்டு பெற்றார். ' சாட்சியாபுரம் பெண்கள் உயர்நிலைப்பள்ளி ஆகியவற்றில் நிர்வாகியாக இருந்து அரிய பெரிய காரியங்களைச் செய்துள்ளார். பல கட்டிடங்களை எழுப்பியுள்ளார்.'

அருள்திரு.கிரப் அவர்கள் சாட்சியாபுரத்தில் பல மாற்றங்களையும். பல சீர்த்திருத்தங்களையும் கொண்டு வந்தார். கிரப் ஐயர் அவர்கள் குருத்துவபணி மட்டும் அல்லாமல் சமுதாயத்தில் கல்வி பணி செய்வதில் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக்கொண்டார். தான் ஓய்வு பெற்ற பின்பும் அயராது உழைத்தார். கிரப் ஐயர் அவர்கள் பிறந்து, திருமுழுக்கு பெற்று, கல்வி கற்றுக்கொண்ட சாட்சியாபுரத்தில் பெண்களுடைய வாழ்வில் கல்வி இருளை நீக்க சுற்றியுள்ள கிராம பெண்களின் வாழ்வில் கல்வி என்னும் வெளிச்சத்தை கொண்டு வர CMS பள்ளியை 1960ஆம் ஆண்டு நிறுவினார். இப்பள்ளி தன்னுடைய தகப்பனார் பெயரில் பதிவு செய்தார். '1962ஆம் ஆண்டு சாட்சியாபுரம் தூய மாற்கு ஆலயத்தில் குருத்துவப்பணியை செய்தார். இவர் தான் முதன் முதலில் பாடல் குழுவினரை ஏற்படுத்தினார். இன்று வரை சாட்சியாபுரம் பாடல் குழுவினர் நன்றாக பாடக்கூடியவர்கள் என்று பெயர் சொல்லும் அளவிற்கு வளர்ந்து நிற்கின்றது. '1963ஆம் ஆண்டு முதல் CMS உயர்நிலைப்பள்ளிக்கு தாளாளராக நியமிக்கப்பட்டார். இவருக்கு முன்பு அருள்திரு.ஜான் ஆசீர்வாதம் தாளாளராக முதன்முதலில் நியமிக்கப்பட்டார் என்பது குறிப்பிடத்தக்கது.'

1970 ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் 16ம் தேதி தன்னுடைய 80ஆம் வயதில் கர்த்தருக்குள் மரித்தார். அவரின் அரிய சேவைகளும் நல் ஆலோசனைகளும் மதுரை திருமண்டிலம் வளர்ச்சியுற நற்பயனளித்தன. தன்னுடைய தியாகம், பணம், பொருட்கள், சொத்து அனைத்தையும் கல்வி வெளிச்சத்திற்க்காகவே செலவு செய்தார்.'

---

## மன்னிப்பே மனித வழி

மனிதன் மாபாவியே!
மன்னிப்பினாலே மீட்பு
வரம் வாங்கப் படுவதில்லை
கேட்டுப் பெறுவதுமில்லை
திரமதற்குத் தேவையில்லை
தேவனின் அருளாசியே!
அற்புதம் தற்புகழ்ச்சிகல்ல
தேவைக்கு முதலுதவியே!
தற்போதைக்கான தளர்வே
அருளுரை உரைப்பவர்க்கில்லை
கேட்போரின் உணர்வுக்கே!
ஆராதனை ஆயர்க்கல்ல
பக்தர்கள் பயனுக்கே!
ஆன்மீக பலத்திற்கல்ல
ஆன்ம சாந்திக்கே!
ஆசி எங்குமில்லை
அளிப்பவர் எவருமில்லை
ஆசி அருளாலே வரும்
அருள் உம்வேண்டலல்ல
இறையருள்வதே உம்மாசி
நல்வாழ்வு இறையாசியின் விலையன்று
மன்னிப்பே மனிதவழி
இறையாசி இலவசமே
நன்றி அவர் வசமே!

இலாசரஸ் செல்வநாதன்
காட்பாடி

மோதிலால் ஜோயல்
முதலூர்

# திரும்பிப் பார்க்கிறேன்...

இன்றைக்கு நாம் பெண்களுக்கான இடஒதுக்கீடு, சம உரிமை பற்றி பேசிக்கொண்டிருக்கிறோம். ஆனால் சுமார் 200 வருடங்களுக்கு முன்பு இந்தியாவில் பெண்கள் கல்வி பயில்வதற்கு கூட ஏற்றசூழல் இல்லாதிருந்தது. ஆச்சரியமாக இருக்கிறது அல்லவா? இன்றைக்கு நாம் அனுபவிக்கும் அநேககாரியங்கள் தேவன் அனுப்பி கொடுத்த மிஷனரிகளின் தியாகத்தாலேயே கிடைத்தது என்பதை நாம் ஒருநாளும் மறந்து போகக்கூடாது. திருநெல்வேலி பெண்கள் கல்வி அறிவில் வளர, இங்கிலாந்து தேசத்தில் இருந்த 14 வயது மாற்றுத்திறனாளி சிறுமி ஒருத்தி என்ன செய்தாள் என்று பார்க்கலாம்.

19 ஆம் நூற்றாண்டில் பாளையங்கோட்டை பகுதியில் ஊழியம் செய்து வந்த ஜான்டக்கர் என்ற CMS மிஷனரி ஒருவர் இங்கிருந்த நிலைமையை பார்த்துவிட்டு இங்கிலாந்து நாட்டில் இருந்த தன் தங்கை சாராள் டக்கருக்கு எழுதிய ஒரு கடிதத்தில், இங்கு பெண்கள் பள்ளிக்கூடமே போவதில்லை, வேற்று ஆண்களைப் பார்த்தால் கூட வீட்டிற்குள் சென்று கதவைச் சாத்திக் கொள்கிறார்கள் என்று எழுதினார். ஆம் 19 ஆம் நூற்றாண்டிலே இங்கு நிலைமை அப்படித்தான் இருந்தது. அடுப்பூதும் பெண்களுக்கு கல்வி எதற்கு? என்று நம் சமுதாயத்தில் கேட்கப்பட்டது. இந்த கடிதத்தை படித்த அவரது தங்கையின் மனதில் திருநெல்வேலி பெண்களைக் குறித்த ஒருபாரம் உண்டானது. திருநெல்வேலி பெண்கள் முன்னேற கல்வி அறிவு இன்றியமையாதது என்று உணர்ந்தாள். அவள் ஒரு மாற்றுத்திறனாளி. அவளால் நடக்க முடியாது. அவளால் என்ன செய்ய முடியும்? ஒன்று செய்தாள்! தன் தோழிகளிடம் இந்த காரியங்களை பகிர்ந்து கொண்டதால் அவர்கள் கொடுத்த 200 பவுண்ட் பணத்தையும், தன்னிடமிருந்த நகைகளையும் தன் அண்ணன் ஜானுக்கு அனுப்பிவைத்தாள். பெண்களுக்கென்று கல்வி நிலையங்களை அமைக்க கேட்டுக்கொண்டாள். அவள் அனுப்பின உதவி தொகையை கொண்டு 1845ஆம் ஆண்டு கடாட்சபுரத்தில் (நாசரேத் அருகில் உள்ள கிராமம்) ஆசிரியைப் பயிற்சி பள்ளி தொடங்கப்பட்டது.



**கல்வி கற்றவர்கள் கல்வி கல்லாதோர்க்குக்**
**கடன் பட்டவர் கண் திறக்கவே**
**பல் வழி அலையும் பாதைத் தப்பினோரை**
**பரிந்து திருப்ப நிதம் பார்த்திடுவீர்.**

அதே வருடம் சாத்தான்குளத்தில் பெண்கள் பயிலபள்ளியும், விடுதியும் கட்டப்பட்டது. ஆசிரியைப் பயிற்சி பள்ளியில் தேர்ச்சி பெற்ற ஆசிரியைகளைக் கொண்டு மிகக் குறுகியகாலத்தில் மிஷினரி ஜான், பாளையங்கோட்டை, தென்காசி, நல்லூர், திருநெல்வேலி சந்திப்பு போன்ற இடங்களில் இருபதுக்கும் மேற்பட்ட கிளைப் பள்ளிகளைத் தொடங்கினார். சாராள் தன்னால் நடக்க முடியாவிட்டாலும் கூட தையல் வேலை செய்தும், தன் நண்பர்களுக்குக் கடிதம் எழுதியும் பணத்தை சேகரித்து தன் அண்ணனுக்கு தொடர்ந்து அனுப்பி வைத்தாள். 1857 ஆம் ஆண்டு சிறிய வயதிலேயே மரித்துப் போனாள் அவள். அவள் மரித்த பின்பும் கூட அவளது தோழிகளான மரியா, சோபியா போன்றவர்கள் திருநெல்வேலியில் பெண்கள் கல்விக்காக தொடர்ந்து உதவி செய்து வந்தார்கள்.

அதன் விளைவாகவே 1895 ஆம் ஆண்டு திருநெல்வேலியில் சாராள் டக்கர் கல்லூரி (தென்னிந்தியாவின் முதல் பெண்கள் கல்லூரி) ஆரம்பிக்கப்பட்டது. ஆம்! சாராள் டக்கர் என்ற அந்த பெண் திருநெல்வேலிக்கு வராமலேயே இத்தகைய பெரிய காரியங்களை சாதித்து சரித்திரத்தில் இடம் பெற்று விட்டாள். நான் ஒரு மாற்றுத்திறனாளி, என்னால் என்ன செய்ய முடியும்? என்று அவள் நினைக்கவில்லை. அவள் தன்னால் இயன்றதைச் செய்தாள்.

வாசகர்களே! நாம் கல்வியறிவு பெற மிஷனரிகளும், அவர்கள் குடும்பத்தினரும் செய்த தியாகத்தை எண்ணிப்பாருங்கள். அவர்கள் எல்லாம் படித்தவர்கள் தானே? அவர்கள் நாட்டிலேயே நல்லவேலை செய்து சொகுசாய் வாழ்ந்திருக்கலாமே! ஏன் இங்கு வந்து கோதுமை மணியானார்கள்?.... கிறிஸ்துவின் அன்பு தங்களை நெருக்கி ஏவியதாலே தங்களையே நமக்காக ஊற்றினார்கள். அவர்களிடம் இருந்து நன்மையை பெற்ற நாம் அதற்கு பதில் செய்யாமல் இருப்பது சரியா? நாம் பலனற்ற திராட்சை செடியாய் இருப்பது நியாயமா? இருண்ட பகுதிகளுக்கு கல்வியையும், சுவிசேஷ ஒளியையும் எடுத்துச் செல்வது நம்கடமையன்றோ? நமது பட்டமும், திறமையும், நேரமும் நிலையற்ற காரியங்களுக்காகவே செலவிடப்படுவது தகுமா? சாராள் டக்கர் செய்தது போல இந்தியர்கள் கல்வியறிவில் வளர நம்மால் இயன்றதைச் செய்வோம். எழும்பிடு வீர வாலிபரே!

# வரலாறு முக்கியம் மன்னரே!

மைக்கேல்
திருநெல்வேலி



வரலாறு தெரியாதவன் ஞாபக சக்தி இல்லாதவன் என்கிறார் ஒரு பெரியவர். வரலாற்றைப் படித்து அதில் எனக்கு என்ன பாடம் இருக்கிறது என்று யோசிக்காதவர்களையும், வரலாற்றில் கற்றுக் கொண்ட பாடங்களை வாழ்க்கையில் நடைமுறைப்படுத்த முடியாதவர்களையும் யார் என்று சொல்ல?

சிலைகளாகவும் ரூபாய் நோட்டுக்களில் படமாகவும் காந்தி இருப்பது சரித்திரம். ஆனால் அதே சிலைகள் எத்தனை பேரைப் பாதித்திருக்கின்றன? காந்தி சிரிக்கும் ரூபாய் நோட்டுக்கள் அவர் கொள்கைகளுக்கு எதிராக பயன்படுத்தப்படுவதைப் பற்றி என்ன சொல்வீர்கள்?

சிலுவை ஒரு சின்னமாக மாறிவிட்டது அல்லவா? திருச்சபை ஒரு இயக்கமாக இருந்து, நிறுவனமாகி இப்போது ஒரு நினைவுச் சின்னமாக மாறிவிட்டதை நாம் கவனிக்காமல் விட்டுவிட்டோமா? இது மெயின் லைன் எனப்படும் சபைகளுக்கு மட்டுமல்ல, அனைத்து சபைகளுக்கும் பொருந்தும்.

வருடா வருடம் நினைவு நாட்களைக் கொண்டாடிவிட்டு அந்த மிஷனரிகளையும் அவர்களது கொள்கைகளையும் பற்றி அலட்சியமாக வாழும் நமக்கு இது பெரிதாகத் தெரிவதில்லை. இயேசு நாதரையே வருடத்துக்கு சில நாட்கள் நினைத்துப் பார்த்துவிட்டு ஓரமாக வைப்பவர்கள் தானே நாம்?

மிஷனரிகளின் வாழ்க்கை எல்லாம் முழுமையாக பூரணமானது என்பது போல, "இரத்தம் சிந்தி மிஷனரிகள் உருவாக்கிய சபை எப்படித் தரம் தாழ்ந்துவிட்டது?" என்று சமூக ஊடகத்தில் கருத்து சொல்லிவிட்டால் போதுமா? மிஷனரிகளின் பெயர்களை நம் பிள்ளைகளுக்கு வைத்துவிட்டு அவர்களைப் பற்றிய புத்தகங்களை நம் அலமாரிகளில் அலங்காரமாக வைப்பது மட்டும் போதாது. அவர்களது வாழ்க்கையில் நாம் கற்றுக் கொண்டவைகளை இன்றைய சூழலில் எப்படி நடைமுறைப் படுத்தலாம் என்று சிந்தித்து செயல்படுவது தான் நம் முன் இருக்கும் பெரும் பொறுப்பும் பாக்கியமும் ஆகும்.

சங்கீதங்கள் அனைத்துமே வரலாற்றை மேற்கோள் காட்டி கர்த்தரையும் அவர் செயல்களையும் குறிப்பிட்டு துதித்து, தங்கள் வரலாற்று நாயகர்களைக் குறிப்பிட்டு, முன்னோர்களின் தவறுகளைக் குறித்து புலம்புவதாகவே இருப்பதில் காரணம் இல்லாமல் இல்லை.

அடுத்த தலைமுறைக்கு நாமும் வரலாறாக இருக்கப் போகிறோம். நம் செயல்கள், சாதனைகளை இதைப் போல நம் பின்னோர்கள் கொண்டாடுவார்களா? மிஷனரிகளின் காலம் வேறு நம் காலம் வேறு. காலத்துக்கு ஏற்ப நம் ஊழியங்களை செய்கிறோமா? அல்லது அதே பழைய முறைகளைப் பிடித்துக் கொண்டு தொங்குகிறோமா?

கேள்விகளாகவே இந்த கட்டுரை முழுவதும் நிறைந்திருக்கிறது அல்லவா? சில பதில்களையும் தந்து முடிக்கவிருக்கிறேன்.

மிஷனரிகள் அந்தக் காலத்தில் துவக்கியவைகள் அந்தக் காலத்துக்குத் தேவையானவைகள். அவைகளை இன்னும் கட்டிப் பிடித்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் அவர்கள் துவங்கிய பள்ளிகளைவிட சிறந்த பள்ளிகள் வந்துவிட்டன. மருத்துவமனைகள் மூலைக்கு மூலை வந்துவிட்டன. சமூக சேவைக்கு படிப்புகள் வந்து சமூக சேவைகளுக்கு சம்பளங்கள் கொடுக்கப்படுகின்றன. நம் திருச்சபையின் சமூக சேவைகள் அரசியலில் மூழ்கி நாறிக் கொண்டிருக்கின்றன. நாம் இந்தக் காலத்தில் புதிதாக, காலத்துக்குப் பொருத்தமானதாகச் செய்யும் ஊழியங்கள் என்ன என்று வரிசைப்படுத்தச் சொன்னால், கொஞ்சம் தர்மசங்கடமாகத் தான் இருக்கும்.

நம் மிஷனரிகள் பள்ளிகள் திறந்தார்கள். புதிய ஏற்பாட்டைத் தமிழில் அச்சடித்துக் கொடுத்தார்கள். நம் மொழியையும் முன்னேற்றிக் கொடுத்தார்கள். நாம் அதில் திருப்தியடைந்து போய்விட்டோம். கல்வியறிவு பெற்று யானைப் பசியுடன் இருந்த தமிழர்களுக்கு சோளப் பொறியாக நாம் சில சின்ன பத்திரிக்கைகள், செய்தி மலர்கள், ஜெபக் குறிப்புகள் ஆகியவற்றைக் கொடுத்தோம். ரஷ்யாவிலிருந்து கதைப் புத்தகங்களும், பல துறை சார்ந்த புத்தகங்களும் இறக்குமதி செய்யப்பட்டன. அதில் பல கிறிஸ்தவ அறநெறிகளுடன் இருந்தாலும், கம்யூனிசமும் கடவுள் மறுப்பும் அத்துடன் கூட இலவச இணைப்பாக சேர்ந்து கொண்டது.

கிறிஸ்தவர்களின் விசுவாசமும், சேவைகளும் தராத பலவற்றை இந்த கம்யூனிசமும் கடவுள் மறுப்பும் தாராளமாகக் கொடுத்தன. அவற்றில் பல மிகவும் தேவையானவைகள் தான். சமத்துவம், சமூக நீதி, வேலை வாய்ப்பு, உரிமைக்குரல் என்று நம் சபைகளில் கிடைக்காதவைகள் அங்கே கிடைத்தன. அத்துடன் கலை, இலக்கியம், ஆக்கத்திறன் என்று அவர்கள் கொடுக்க, நாம் "ஆவிக்குரிய" சமாச்சாரங்களை மட்டுமே கொடுத்துக் கொண்டிருந்தோம். அங்கே கலைஞர்கள், சிந்தனையாளர்கள், சமூக சீர்திருத்தவாதிகள் உருவானார்கள். அவர்களும் அவர்களது பிள்ளைகளும் தான் இன்று தமிழகத்தின் கலைத்துறை, அரசியல், சிந்தனை, சீர்திருத்தம் போன்றவற்றில் அரசாண்டு கொண்டிருக்கிறார்கள். நம் ஊழியங்களைப் பற்றி நகைச்சுவையாகவும் விஷத்தை செலுத்துவதாகவும் சினிமாக்களில் காட்சிகளையும் வசனங்களையும் வைத்திருக்கிறார்கள்.

நம் சபைகளில் அரசியவாதிகளும் மாய்மாலக்காரர்களும் உருவானார்கள். நாமும் அதைக் கண்டு கொள்ளவில்லை. நாம் வேறு பிரிக்கப்பட்டவர்கள் என்று ஆவிக்குரிய வட்டத்தில் பதுங்கிக் கொண்டிருக்க, பலர் வட்டத்தைவிட்டு இரகசியமாக வெளியேயும் ஒரு காலை வைத்திருந்தார்கள். ஆலயத்துக்குள் ஒரு வாழ்க்கை, வெளியே இன்னொரு வாழ்க்கை என்று கிறிஸ்தவத்தின் வித்தியாசத்தைக் காட்டத் தெரியாமல், காட்ட முடியாமல் நொண்டிக் கொண்டிருக்கிறார்கள்.

கர்த்தரை நேசி, பிறனை நேசி என்ற நமது மார்க்கத்தின் அடிப்படையில் இரண்டையும் நாம் ஒழுங்காகச் செய்யாமல் இருக்க, கடவுள் மறுப்பாளர்கள் பிறனை நேசிப்பதை நன்றாகச் செய்கிறார்கள். நாம் கர்த்தரை நினைக்கிறோம் என்று எதையோ செய்து கொண்டு, பிறனை புறக்கணித்துக் கொண்டிருக்கிறோம். அவர்கள் கடவுளை மற, மனிதனை நினை என்கிறார்கள். அதை நன்றாகச் செய்யவும் செய்கிறார்கள். நாம் வரலாற்றில் இருந்து கற்றுக் கொள்வோம். கற்றுக் கொண்டவற்றை நடைமுறைப்படுத்துவோம் வரலாற்றை உருவாக்குவோம். தொடர்ந்து வரலாற்றை , குறிப்பாக திருச்சபையின், அருட்பணியின் வரலாற்றை அலசி ஆராந்து நம் காலத்துக்கு ஏற்ப மறுவாசிப்பு செய்வோம். அடுத்த மாதம் சந்திக்கலாம்.

---

# வெஸ்யன் மெத்தடிஸ்ட மிஷன் வரலாறு

3

டேனியல் மோகன்ராஜ்
திருவள்ளூர்

**செ**ன்ற இதழில், அருட்பணி. ஜான் வெஸ்லியால் இங்கிலாந்தில் ஏற்பட்ட மாபெரும் ஆன்மீக மறுமலர்ச்சி குறித்து அறிந்து கொண்டோம். இங்கிலாந்தில் ஜான் வெஸ்லியின் பெயர் சிறந்து விளங்கிய அத்தருணத்தில் அம்மறுமலர்ச்சியை அமெரிக்காவிற்கு கொண்டு செல்ல ஜான்வெஸ்லி, டாக்டர். தாமஸ் கோக் என்பவரை நியமித்தார். இவர் ஜான் வெஸ்லியின் பிரசங்கத்தால் ஈர்க்கப்பட்டு அவருடன் மிஷனரி பணியாற்ற இணைந்திருந்தார். 1787 ஆம் ஆண்டு முதல் ஒன்பது முறை அமெரிக்காவிற்கு மிஷனரி பயணம் மேற்கொண்டு அங்கு மெத்தடிஸ்ட் திருச்சபையின் வளர்ச்சிக்கு வலுவான அடித்தளமிட்டவர்.

டாக்டர்.கோக் மேற்கிந்திய (அமெரிக்கா) மிஷனரி பயணத்தை முடித்த பிறகு இந்தியாவில் மிஷன் பணிகளை துவக்க எண்ணம் கொண்டிருந்தார். அதற்கான முயற்சியில் சொந்த நிதி திரட்டி, சரியான திட்டம் வகுத்து, சிறந்த மக்களை தேர்வு செய்தார். மிஷனரி பணிகளுக்கு ஆலோசனை வழங்க ஒரு குழு உருவாக்கப்பட்டது. அக்குழுவின் ஆலோசனைக் கேற்ப கிழக்கிந்திய கம்பெனியின் இயக்குனர்களின் நீதிமன்றத்தை அணுகினார். அந்நிறுவனத்தின் முக்கிய பிரமுகர்களான லார்ட். டிக்மவுத், திரு. வில்லியம்வில் பெர்போர்ஸ் மற்றும் திரு. கிரண்ட் (கிழக்கு இந்தியா நிறுவனத்தின் தலைவர்) போன்றோரை கோக்பலமுறை நேரில் சந்தித்து பேசியதின் விளைவாக அவர்களின் கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டு 1813 ஆம் ஆண்டு இந்தியாவில் மிஷனரி பணியை நிறுவுவதற்கு ஒப்புதல் அளிக்கப்பட்டது.

டாக்டர்.கோக் இந்தியாவை பற்றி நன்கு அறிந்தவர்களிடம் ஆலோசனைகளை பெற்றுக்கொண்டார். அவரின் முக்கிய ஆலோசகரான டாக்டர். கிளாடியஸ் புகேனனின் ஆலோசனையின் அடிப்படையில் முதலில் இலங்கை சென்று மிஷனரி பணி மேற்கொள்ள தீர்மானிக்கப்பட்டது. ஏனெனில் இலங்கையில் மக்கள் தொகை குறைவு மேலும் மொழி மற்றும் கலாச்சாரரங்கள் ஏறக்குறைய இந்தியாவை போலவே இருப்பதால் அவர்களுக்கு இறைபணியாற்றுவதின் மூலம் விரைவில் அந்நிய நாட்டில் மிஷனரி பணிசெய்யும் அனுபவத்தை பெற்று விடலாம் என்று அம்முடிவு எடுக்கப்பட்டது. இந்தியாவிற்கான வெஸ்லியன் மிஷனரி பயணம் 29 டிசம்பர் 1813 அன்று காலை கடல் வழிப்பயணமாக துவங்கப்பட்டது. இரண்டு மிஷனரி குழுக்களாக கிழக்கிந்திய கம்பெனிக்கு சொந்தமான கப்பல்களில் பம்பாய்க்கு பயணத்தைத் துவங்கினார். 'கபல்வா' கப்பலில் டாக்டர். கோக், திரு. குளோ, திரு. ஹார்வார்ட் மற்றும் திருமதி. ஹார்வார்ட் பயணித்தனர். மற்றொரு கப்பலான 'லேடிமெல்வில்லில்' அருட்பணி. ஜேம்ஸ்லிஞ்ச், அருட்பணி. எர்ஸ்கின், அருட்பணி. தாமஸ்ஸ் குவன்ஸ், திரு. அவுல்ட் மற்றும் திருமதி. அவுல்ட் பயணித்தனர். டாக்டர். கோக் இம்மிஷனரி பணிக்காக தன்னை முழுவதுமாக அர்ப்பணித்தார். இம்மிஷனரி குழுவில் அருட்பணி. ஜேம்ஸ் லிஞ்ச் பயணித்தார். இவர் மிஷனரி பணிகளில் நல்ல அனுபவம் வாய்ந்தவர். இங்கிலாந்தில் இருந்த போது YMCA விலும் மெத்தடிஸ்ட் குழுக்களில் அநேக மிஷன் பணிகளில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டவர்.

மிஷனரிகள் கப்பல் பயணத்தில் பல பின்னடைவுகளை சந்தித்தனர், இதில் மிஷன் தலைவர் டாக்டர். தாமஸ் கோக் மற்றுமொரு மிஷனரியின் மனைவி திருமதி அவுல்ட் ஆகியோர் உடல் நலகுறைவால் கடல் பயணத்தில் இறந்து விட்டனர். 21 மே 1814 ஆம் ஆண்டு தனது தலைமையின்றி மிஷனரி குழுவினர் பம்பாயில் இறங்கினர். துரதிருஷ்டவசமான மிஷனரிகள் பல்வேறு நிதிநெருக்கடியையும், இன்னல்களையும் சந்தித்தனர். பம்பாயில் ஒருமாத காலம் தங்கியிருந்த மிஷனரிகள், திருமதி. ஹார்வார்ட் அவர்கள் குழந்தை எதிர் பெறும் சமயம் என்பதால் ஹார்வார்ட் தம்பதியினரை பம்பாயில் விட்டுவிட்டு மிஷனரி குழு இலங்கையை நோக்கி 'ஏர்ல்ஸ்பென்சர்' என்ற கப்பலில் 20 வது ஜீன் 1814 அன்று புறப்பட்டு சென்றது.



தொடரும் .....

# தமிழக வரலாற்றின் ஒளியேற்றி... இரேனியஸ்!!

முனைவர். ஜான்சி பால்ராஜ்
வன்னியன்குடியிருப்பு

ஐரோப்பாவிலிருந்து கிறித்தவத்தின் மெய் ஒளியை உலகெங்கும் ஏற்றிட விளைந்த மிஷனெரிகளின் பணிகள் மகத்தானவை!

வெறும் சமயம் பரப்புதல் மட்டுமே இவர்களது பணியாக இருந்திருந்தால் பிற மதப் பரப்பிகளைப் போலவே இவர்களையும் காணாமல் போக விட்டிருக்கலாம் நாமும்.! ஆனால் மக்களின் வாழ்வாதார தேவைகளை முதற்கண் நிறைவேற்றி அந்தந்த நாடுகளில் காணப்பட்ட ஆதிக்க நிலையையும் அடிமை முறைகளையும் களைந்து, விடுவித்து அதன் பின்னரே தாங்கள் கண்டுணர்ந்த ஆன்மீக வெளிச்சத்தை காண்பித்தனர் இவர்கள். அதற்கு மிக முக்கியக் காரணமாக விளங்கியது ஜெர்மனின் ஹலே பல்கலைக்கழகத்தின் மிஷனெரி பயிற்சிக்களத்தில் அவர்களுக்கு கொடுக்கப்பட்ட கட்டளைகளே! அவற்றுள்

**1. அனைவருக்கும் கல்வி வழங்க வேண்டும்.**

**2. ஒவ்வொருவருக்கும் வாழ்கைக்கான தொழில் பயிற்சி அளிக்க வேண்டும்.**

என்ற இவ்விரு அடிப்படை தேவைகளையும் அளித்தலின் விளைவால் தான் நமது சமய ஏற்பு அமையப் பெறல் வேண்டும் என்பதே அதன் மையக் கருத்தாக்கம். அத்தகைய அழுத்தமான பயிற்சிக்குப்பின்னரே அவர்கள் பிற நாடுகளுக்கு சமயப்பணியாளர்களாகச் செல்ல அனுமதிக்கப்பட்டனர். அவ்விதத்தில் ஹலே பல்கலைகழகத்தினால் பட்டைத்தீட்டப்பட்ட வைரமாய் கி.பி1814ஆம் ஆண்டு இந்தியாவிற்கு வந்தவர் தான் சார்லஸ் தியோபிலஸ் ஈவார்ட் ரேனியஸ் என்ற செயல்வீரர்.

இந்தியாவிற்கு வந்த அனைத்து மிஷனெரிகளிலும் மிகவும் சிறப்பிற்குரியவராகத் திகழ்ந்த இவர், வெகு துணிச்சலோடு இந்திய கட்டமைப்பின் மிக மோசமான சாதியத்தின் வேரை முதன் முதலில் அசைத்தவர்...!

ஆதிக்கவர்க்கத்தினரால் ஏற்படுத்தப்பட்ட அடிமைத்தன மரபுவழிச் சாசனங்களின் சூட்சுமங்களைப் பாமர மக்கள் தாங்களாகவே உணராதவரை அவர்களை அதிலிருந்து விடுவிப்பது என்பது தற்காலிகமானதாகவே இருந்து வந்தது.

நிரந்தரமான தீர்வை, கல்வியைக் கொண்டுதான் அடையச் செய்ய முடியும் என்பதை உணர்ந்திருந்த ரேனியஸ் தாம் ஏற்படுத்திய சபைகள் அமைந்திருந்த ஊர்களிலெல்லாம் சாதி சமயப் பாகுபாடின்றி கல்வியைக் கட்டாயமாக்கினார்.

அவருக்கு முன்பு இங்கு வந்திருந்தோரும் கல்விப் பணிகளில் ஈடுபட்டிருந்தாலும் இவரது கல்விப்பணி நவீன கல்விமுறைக்கு முதல்தர விதைகளாயின. கல்வியே அறியாமையை அகற்றும் ஆயுதமாதலால் கல்வியில் அதிகக் கவனம் செலுத்தினார்.

வெறும் எண்ணும் எழுத்தும் தான் கல்வி என்ற நிலையை மாற்றி , பொது அறிவு, தாவரம், மண்வளம், வரலாறு ,புவியியல், கணிதம், கனிப்பொருள்கள், மொழியறிவு...என்று இன்றைய கல்விமுறையை ஒத்த கல்வித் தரத்தை ஏற்படுத்த நூல்களையும் தாமே எழுதி இச்சமூகத்தின் அறிவுக் கண்களைத் திறந்து வைத்தார்.

அதில் கி.பி1832 ல் அவரெழுதிய பூக்கோளசாத்திரம் என்ற அறிவியல் நூல் வரலாற்றுச் சிறப்பு மிக்கதாயிற்று! இந்நூல் இந்தியர்களின் தவறான அறிவியல் பார்வையை மாற்றி தீர்க்கமாக சிந்திக்கத் தூண்டியதில் முதலிடம் பிடித்தது; ஆசியாவிலேயே முதன்முதலாக எழுதப்பட்ட அறிவியல் நூலாக ஏற்கப்பட்டிருக்கிறது. இதன் ஒரு பிரதி நமது வரலாற்றுச் சங்கத்தின் நூலகத்தில் இருப்பது பெருமைக்குரியதாகும்.

அந்நூலில் வானம், பூமி, சூரியகிரகணம், சந்திரகிரகணம் போன்ற இயற்கை நிகழ்வுகளைத் தம் கற்பனையில் தோன்றிய கதைகளாகப் புனைந்து அவற்றை எழுத்துக்கள் வாயிலாகவும் வாய்வழிச் செய்தியாகவும் மக்கள் நம்பிக்கொண்டு வந்தவற்றை மாற்றியமைக்க ரேனியஸ் அரும்பாடுபட்டிருப்பதை அதில் அறியமுடிகிறது.. !

முறையான கல்வியளிப்பதிலும் அதில் செழுமையடையச் செய்வதிலும் பெரும் கல்வியாளராகவே செயல்பட்டிருக்கிறார் ரேனியஸ். ஏனோதானோவென்று பெற்றோர்களின் அக்கரையற்று பெயரளவில் செயல்பட்ட பள்ளிகளை மூடினார். பள்ளிகளுக்கென்றே சிறந்த ஆசிரியர்களை பயிற்றுவிக்கும் பயிற்சி பள்ளிகளை (செமினரி) ஏற்படுத்தி மிகச் சிறந்த ஆசிரியர்களை உருவாக்கினார். சாதியத்தை கடைபிடிப்பதை தமது பள்ளிகளிலும் ஆசிரிய பயிற்சிப் பள்ளிகளிலும் கடுமையாக எதிர்த்தார். பள்ளியின் கல்வித் தரத்தை ஆராய, கல்வி விசாரணை அல்லது பரீட்சிக்கும் ஆசிரியர் என்றதொரு (பதவியை) ஆய்வுக் குழுவையும் ஏற்படுத்தி (Inspecting School Master I.S.M) அவ்வப்போது பள்ளிக்கல்வியின் தரத்தை சீரமைத்தார். இச்செயல் முறை இந்தியாவில் முதன்முதலாக ரேனியசால் ஏற்படுத்தப்பட்ட ஒழுங்கு முறையாகவே அறியமுடிகிறது!

பெண்கல்வியின் அவசியத்தை எடுத்துரைத்து அதற்கென்றே பெண்கள் பள்ளிகளை ஏற்படுத்தி அனைவருக்குள்ளும் சமத்துவ சிந்தையை விதைத்தவர் ரேனியஸ். கி.பி1823 ஆம் ஆண்டு பெண் ஆசிரியர்களைப் பயிற்றுவிக்கும் , பெண் ஆசிரியப்பிற்சிப்பள்ளியையும் ஏற்படுத்தினார். இப்பள்ளியே இந்தியாவில் இரண்டாவது பெண்களுக்கான தங்கும் விடுதியுடனான பள்ளியாகும். இன்றும் இது பாளையங்கோட்டையில் மேரி சார்ஜென்ட் பெண்கள் மேல்நிலைப்பள்ளியாக சிறப்பாக செயல்பட்டுவருகிறது.

அடுத்தவர் சீரமைத்த நிலங்களை விளைவிப்பது எளிது...! ஆனால் காட்டையும் மேட்டையும்....திருத்தி விளைநிலமாக்கும் பணிகள் கடினமானவை...! அதனை சுமார் 24 ஆண்டுகாலம் நேர்த்தியாக செய்து புரையோடிப் போய்க்கிடந்த தமிழக மண்ணின் அசுத்தங்களை அறிவொளிப் புகுத்தி, அடையாளங்கண்டு ஒதுங்கவும் ஒழிக்கவும் செய்தவர் சமூகச் செயற்பாட்டாளர் ரேனியஸ் அவர்களே...!!

இருளின் ஆதிக்கத்தை விரட்டியடிக்கும் கிறித்தவத்தின் தார்பரியம் தான் உலகின் இன்றைய வெளிச்சத்திற்கான முழுமையான காரணம் என்றால் அதுவே சத்தியம்! அதேனென்றால்...உலகத்திலே வந்த எந்த மனுஷனையும் பிரகாசிப்பிக்கிற ஒளியே அந்த மெய்யான ஒளி ( இயேசு கிறித்து). யோவான் 1:9

# இந்தியாவில் இருளகற்றிய இயேசு

அருள்திரு.முனைவர் ச.இராஜசேகரன்
திருச்சி

இருளில் நடக்கிற ஜனங்கள் பெரிய வெளிச்சத்தைக் கண்டார்கள்; மரண இருளின் தேசத்தில் குடியிருக்கிறவர்களின்மேல் வெளிச்சம் பிரகாசித்தது (ஏசா-9:2) என்ற ஏசாயாவின் தீர்க்கதரிசனம் இயேசுவின் பிறப்பால் நிறைவேறுகிறதாகவும், முழு மனுகுலத்திற்கும் அகஇருளையும் புறஇருளையும் போக்க பிறந்தார் என்று யோவான் பலமுறை அவனுடைய நற்செய்தி நூலில் குறிப்பிடுகிறார்: மனுஷர்களுக்கு ஒளியாயிருந்த ஜீவன் இயேசுவே (1:4), இருளிலே பிரகாசித்தும் இருளானது பற்றிக்கொள்ளாத ஒளி இயேசுவே (1:5), உலகத்தில் உள்ள எந்த மனுஷரையும் பிரகாசிப்பிக்கிற ஒளி இயேசுவே (1:9), இருள் பற்றிக்கொள்ளாததற்கு காரணம் மனுஷர்களுடைய பாவமே (3:19), பொல்லாங்கு செய்கிறவன் ஒளியைப் பகைக்கிறான், அவனுடைய காரியம் கண்டிக்கப்படாதபடி ஒளியினிடம் வராதிருக்கிறான் (3:20), சத்தியத்தின்படி செய்கிறவன் ஒளியிடம் வருகிறான் (3:21). நான் உலகத்திற்கு ஒளியாக இருக்கிறேன், என்னைப்பின்பற்றுகிறவன் ஜீவஒளியை அடைவான் (8:12), ஒளியாகிய என்னுடன் இருங்கள், என்னை விசுவாசியுங்கள் என்று இயேசு தன்னையே ஒளியாக சீடர்களிடம் வெளிப்படுத்தினார் (12:35-36).

இயேசுவாகிய ஒளி யூதர்களுக்கு மட்டுமல்ல யூதரல்லாதோர்க்கும் என்று லூக்கா குறிப்பிடுகிறார் (2:30). "நீங்கள் அந்த ஒளிக்கு சாட்சிகள்" என்பது பிரகாசிப்பிக்கப்பட்ட அனைவர்க்கும் கொடுக்கப்பட்ட பிரதானக் கட்டளை: அதையே யோவான் ஸ்நானகன் சொன்னான் (யோவான் 1:7-8). ஏசாயாவால் தீர்க்கதரிசனமாக சொல்லப்பட்டார். "நானே அந்த ஒளி" என்று சொன்ன இயேசுவின் ஒளியால் பிரகாசிப்பிக்கப்பட்ட அனைவரும் ஒளியின் பிள்ளைகளாய் ஜீவஒளியை அடைந்தவர்கள், அந்த ஜீவ ஒளிக்கு ஜீவனுள்ள சாட்சிகள் என்றார் இயேசு (மத்.5:14). ஜீவஒளியை பெற்று ஒளியின் பிள்ளைகளாய் ஒளியைக்குறித்து சாட்சி சொன்னவர்களால் எருசலேம், யூதேயா, சமாரியா, மற்றும் ரோமாபுரி போன்ற பகுதியில் உள்ள இருளில் இருக்கிற பெருங்கூட்டத்தார் ஜீவஒளியைப் பெற்ற வரலாற்றை அப்போஸ்தலர் நடபடிகள் கூறுகிறது. அப்படி இந்தியாவின் இருளகற்ற ஜீவஒளியை தன்வாழ்வில் அனுபவித்த தோமா இங்கு வந்து இந்தியாவின் பல்வேறு சமய இருளைப் போக்கும் ஒளியாக வாழ்ந்து இரத்தசாட்சியாக மரித்தார். அவருக்குப்பின்பு வந்த மேற்கத்திய மிஷனரிகள் சாதிய இருளை நீக்கினார்கள், அத்துடன் சுதந்திர இந்திய கிறிஸ்தவர்கள் சமுதாய இருளை அகற்றிய வரலாற்றை அறிவது அவசியம்.

**சமய இருளகற்றிய தோமா**

இந்தியாவில் தோமா வருகைக்கு முன்பே இந்தியா சமய நம்பிக்கையில் தழைத்திருந்தது. இங்கு கடவுளை இயற்கையாகவும், கல் நட்டு நினைவு சின்னமாகவும் வழிபட்டனர். இரத்தம் சிந்துதல் இல்லாமல் பாவ மன்னிப்பு இல்லை என்னும் நம்பிக்கைக்கேற்ப உயிர் பலி செலுத்தப்பட்டது. இதனை தவறாகப் பயன்படுத்திய பிராமணர்களை எதிர்த்து உருவான இயக்கங்கள் தான் சமணமும் பௌத்தமும். பிராமணர்களின் அட்டூழியங்களை எதிர்த்தவர்கள் கடவுளுக்கு எதிரிகளாக சித்தரிக்கப்பட்டார்கள். கடவுள் பலிகேட்கிறாரா? கடவுள் பெயரில் தவறு செய்கிறவர்களை தண்டிக்காத கடவுள் கடவுளே இல்லை என்னும் முற்போக்கு சிந்தனை மக்களை ஈர்த்தாலும் மக்களுக்கு மாற்றுத்தீர்வை தரமுடியவில்லை. கடவுள் நம்பிக்கையில் இருக்கும் இந்தியர்களை கடவுளே இல்லை என்று சொல்லும் நிலைக்கு கொண்டு போனதற்கான காரணம் பலியிடும் முறையில் பிராமணர்கள் செய்த தவறுகள். பலி கூடாது என்றும் பலி கேட்கும் கடவுள், கடவுள் அல்ல என்று கூறிய சமண பௌத்தர்களுக்கும், பலி வேண்டும், கடவுள் இருக்கிறார் என்று கூறும் இந்துக்களுக்கும் இடையே பெரிய மதமாற்ற கலவரம் நடந்தது. இரண்டு தரப்பிலும் பெரும் அழிவுகள் ஏற்பட்டன.

**பலியை நிறைவேற்றிய குமாரன் என்னும் ஒளி:**

இந்த சூழலில்தான் தோமா இந்தியாவிற்கு வந்தார். இந்த சூழலை நன்கு ஆராய்ந்து, கேள்விகளுக்கு பதில்சொல்லும் நற்செய்தியை கொடுத்தார். பலியிட்டு வழிபடும் சமயத்திலிருந்து வந்தவர் தோமா, அதனால் பலியிடவேண்டியதன் அவசியத்தையும் பலியின் முக்கியத்துவத்தையும் அதனை செய்யவேண்டிய வழிமுறைகளையும் மோசே சட்டத்தின் மூலம் நன்கு கற்றிருந்தவர். அதே வேளையில் உலக பாவத்திற்கு பலியான தேவ ஆட்டுக்குட்டியாகிய இயேசுவுடன் மூன்றரை ஆண்டுகள் இருந்து அவர் மூலமாய் உயிர் பலி, இரத்த பலி, பாவ நிவாரண பலி, குற்ற நிவாரண பலி, சமாதான பலி போன்ற அனைத்து பலிகளும் நிறைவேறிவிட்டதை கண்ணார கண்டவர். தன் வாழ்வில் ருசித்தவர். பலியானவரே இவரை இப்பணிக்கு அனுப்பியவர் என்பதால் பலி நிறைவேறிவிட்டது என்னும்

நற்செய்தியை இயல்பாகவே இனிமையுடன் அவர் சொன்னார். அனுபவத்தோடுகூடிய உண்மைக்கு ஆற்றல் அதிகம், ஆகவே அதைக்கேட்டவர் ஏற்றுக்கொண்டு மாற்றம் பெற்றார்கள்.

**அசைவபலிக்கு மாற்றாக சைவபலியாகிய ஒளி:**

பலி நிறைவேறிவிட்டது என்ற நற்செய்தியுடன் தோமா நிற்காமல் இயேசு அருளிய மாமிச மற்றும் இரத்த பலிக்கான மாற்றையும் அறிமுகப்படுத்தினார். இயேசு பஸ்கா அன்று ஒரு ஆட்டையோ மாட்டையோ பலியிடாமல், மாம்சத்திற்குபதில் ரொட்டியையும், இரத்தத்திற்கு பதில் திராட்சை ரசத்தையும் கொடுத்ததைப் போன்று தோமாவும் இரத்த மற்றும் மாமிசப் பலிக்கு மாற்றாக சைவ அடையாளங்களைக் கொடுத்தார். இந்தியாவில் பலியைப்பற்றிய சச்சரவில் உள்ளவர்களுக்கு இத்தீர்வை கொடுப்பதற்கு தோமா எந்த பல்கலைகழகத்திற்கும் சென்று படித்திருக்க வேண்டிய அவசியமில்லை. அந்நாட்களில் அவர் என்ன மாற்று தீர்வை கொடுத்திருக்க முடியும் என்பதை நாம் நிதானித்துப்பார்க்க வேண்டும். தோமாவிற்குப் பின்புதான் இந்தியாவில் 80 சதவிகிதத்திற்கும் மேலாக இருக்கும் சைவ மற்றும் வைணவ சமயத்தார்கள் சைவ பலியின் அடையாளமாக திருநீரு மற்றும் குங்குமம் பூசுவதும், தேங்காய், பூசனிக்காய், எலுமிச்சைபழம் போன்ற சைவ பதார்த்தங்கள் உடைப்பது, மாமிசம் மற்றும் இரத்தம் போன்ற அசைவ பலியின் நிறைவேற்றத்திற்கு சைவ அடையளமாக வழிபாட்டில் பயன்படுத்தப்படுத்துகிறார்கள். தோமா இவ்வொளியை ஏற்றியிராவிட்டால், கடவுளுக்கு பலி என்ற பெயரில் கீழ் சாதி பெண்கள், குழந்தைகள் என ஒடுக்கப்பட்ட சமூகத்தினரை அழித்திருப்பார்கள். இயேசுவின் பிறப்பால் தோமாவின் நற்செய்தி இந்தியாவின் இருளின் இப்பேரழிவை தடுத்து ஒளியேற்றியுள்ளது.

**சாதிய இருளகற்றிய மிஷனரிகள்**

பிராமணர்கள் இந்தியாவிற்கு வருவதற்கு முன்பு மக்களிடையே தொழில் மற்றும் வழிபாட்டு அடிப்படையில் வேற்றுமைகள் இருந்தன. ஆனால் ஏற்றத்தாழ்வு இல்லை. பிராமணர்களின் பிரித்தாள் கொள்கையால் அவர்களின் மனுதர்ம சாஸ்திரத்தின் அடிப்படையில் மக்களை கடவுள் பெயரில் சாதி என்னும் ஏற்றத்தாழ்வை ஏற்படுத்தி அவர்களை இவர்களுக்கெல்லாம் உயர்ந்தவர்கள் என்று நம்பவைத்தார்கள். சாதி அடிப்படையில் மக்களை தொழில் வாரியாகவும், நிறவாரியாகவும் பிரித்து, பிராமணர்களுக்கு அடிபணிந்தவர்களை அவர்களுக்கு அடுத்த இடத்திலும், கண்டுக்கொள்ளாதவர்களை அதற்கு அடுத்த இடத்திலும், எதிர்த்தவர்களை கடைநிலையிலும் அமர்த்தினார்கள். உயர்சாதிக்காரனுடைய நிழலில் கீழ்சாதிக்காரன் நிழல் பட்டாலும் தீட்டு என்று தண்டித்தார்கள். பொது கிணற்றில் தண்ணீர் எடுக்கத்தடை, பொது சாலையில் நடக்கத்தடை, கல்விக்குத்தடை, மேலாடை மற்றும் செருப்பு அணியத்தடை, வெளிநாடு செல்லத்தடை, குலத்தொழிலைவிட்டு விருப்பத்தொழில் செய்யத்தடை, குழந்தை திருமணம், விதவை மறுமணத்தடை, தேவதாசி முறைகள், உடன்கட்டை ஏறும் வழக்கம், மனித கழிவுகளை மனிதர்களே அகற்றவேண்டும் என பல்வேறு அடிமைத்தனச் சட்டங்களைக் கொண்டிருந்த இந்தியாவில் மேற்கத்திய மிஷனரிகள் அவர்களுடைய அரசியல் அதிகாரத்துடன் சட்டங்கள் இயற்றியும் இயேசுவின் நற்செய்தி அறிவித்து விடுதலை ஒளியை ஏற்றினார்கள்.

**சமுதாய இருளகற்றும் இந்திய திருச்சபைகள்**

இந்தியாவில் சாதி மற்றும் மதங்களால் பிரிக்கப்பட்டு ஒரு சிறுகூட்டம் ஆளுவதை தெய்வநம்பிக்கை மற்றும் தேசிய உணர்வு கொண்ட யாராலும் சகித்துக்கொள்ளமுடியாது. குறிப்பாக இந்தியாவின் பலபாகங்களிலிருந்தும் ஆன்மிக விடுதலையைப் பெற்றவர்கள் இந்தியாவின் எல்லையெங்கும் சென்று இயேசுவின் பிரதான கட்டளைக்கு கீழ்படிந்து, யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்னும் கூற்றுக்கு இணங்கி எத்தரப்பினரையும் விடுவிக்கும் இயேசுவாகிய ஒளியைப் பிரசங்கித்து, சமுதாய இருளைப்போக்கிவருகிறார்கள். அரசியல், சமூகம், பொருளாதாரம் மற்றும் கலாச்சாரத்தின் அடிப்படையில் ஒதுக்கப்பட்டிருக்கிற இந்திய ஆதிவாசி மக்களை அவர்கள் வாழும் மலைகள் கிராமங்களைத் தேடி சென்று அவர்களுக்கு இயேசுவுடன், கல்வி, சுகாதாரம், மருத்துவம், போன்ற அனைத்தையும் கொடுத்து, அவர்களையும் மற்ற சமூதாயத்தினரோடு சமமாகவும் சகஜமாகவும் பழகும் வாய்ப்புகளை வழங்கி அவர்கள் வாழ்வின் இருளைப் போக்கிவருகிறார்கள்.

தென்இந்தியாவில் இருளர், அருந்ததியர், லம்பாடி, லிங்காயத், வன்னியர், போன்ற இனத்தாரும், குஜராத்தில் குக்னா, சௌதிரி, வசாவா, கமித், வார்லி, பீஹார் பகுதியில் போஜ்புரி, ஜார்க்கன்ட் பகுதியில் மால்டோ, சந்தால் போன்ற இனத்தாரும், ஒரிசா மற்றும் குஜராத் பகுதியில் கிறிஸ்டியன் என்னும் சாதியில்லா தரப்பினரும், நாகாலாந்தில் லாரி ஓட்டுநர்கள் மூலமும், திருநெல்வேலியிலிருந்து படகில் அந்தமான் சென்ற சாலமோன் என்று ஒரு ஆசிரியர் மூலம் நிக்கோபாரி இனத்தார் இயேசுவை தெய்வமாக அறிந்துகொண்டு இந்திய சமூதாயத்தில் இயேசுவின் ஒளியால் பிரகாசித்துவருகிறார்கள். அத்துடன் இன்றைய நவீன காலத்தில் தொழில் அதிபர்கள், பிரபல்யமான சினிமா, விளையாட்டு மற்றும் அரசியல் துறை சார்ந்தவர்கள் மத்தியிலும் கிறிஸ்துவின் ஒளி ஏற்றப்பட்டுவருகிறது. அரசியல் போக்கை மாற்றியமைக்கும் ஜெப வீரர்கள் எழும்புவதுடன், அனைத்துத்துறைகளிலும் கிறிஸ்தவ நிபுனர்கள் கிறிஸ்துவின் ஒளியால் பிரகாசிப்பிக்கப்பட்டு சாட்சியாக வாழ்கிறார்கள்.

இந்தியாவில் உள்ள சாதிய, சமய மற்றும் சமுதாய இருள் முற்றிலும் அகல அன்றாடம் ஜெபித்தும், அவைகளைக் கடிந்துகொண்டு பிரசங்கித்தும், அவ்விருளைப் போக்க இடையறாது உழைக்கும் விசுவாசிகள், சுவிசேஷகர்கள், போதகர்கள், மேய்ப்பர்கள், மிஷனரிகள், அப்போஸ்தலர்கள் என முன்வரிசையில் நின்று இருளோடு போராடி ஒளியை ஏற்றிக்கொண்டிருக்கிறார்கள். இவர்களால் அன்றாடம் இயேசு பல்லாயிரம் இந்தியர்களின் இருதயங்களில் பிறக்கிறார். இந்தியர்களை பிரகாசிப்பிக்கிறார். இந்தியாவில் இருளகற்றும் இயேசுவின் இறைப்பணி செய்ய இந்த கிறிஸ்துமஸ் காலங்களில் இயேசுவைப் போல தங்களை தத்தம் செய்து இருளில் இருக்கிற இந்தியர்களை இயேசுவின் ஒளியினிடத்திற்கு வரழைக்கும் உன்னதமான வாழ்வுக்கும் பணிக்கும் ஒப்புக்கொடுக்கவேண்டும். இந்த கிறிஸ்மஸ் காலத்தில் ஒருவருடைய வாழ்வில் கல்வி, மருத்துவம், உடை, திருமணம், போன்ற ஒளியை ஏற்றி அவர்களின் அக மற்றும் முக பிரகாசத்தில் இயேசுவை நாம் தரிசிப்போம்.




# சேலம் மண்ணில் விதைக்கப்பட்ட கோதுமை மணிகள்

*'கோதுமை மணி மண்ணில் விழுந்து மடியாவிட்டால், அது தனி மணியாகவே இருக்கும். அது மடிந்தாலோ மிகுந்த பலனைக் கொடுக்கும்.'- யோவான் 12 : 24*

ஜே.பர்னபாஸ்
சேலம் வரலாற்றுச் சங்கம்

சேலம் மாவட்ட ஆட்சியர் அலுவலகம் எதிரே அமைந்துள்ள சேலம் பழைய ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்தில் அடக்கம்பண்ணப்பட்டுள்ள மிசனரிகள் பற்றிய குறிப்புகள் ..

**1. திருமதி.எலிசா ஸ்டெப்பி (Mrs.Eliza Steffe.L.M.S.)**




இவர் சேலத்திற்கு வந்த லண்டன் மிஷனெரி சங்கத்தின் முதல் மிஷனெரி சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயரின் துணைவியார் ஆவார். இவர்கள் இருவரும் தான் சேலத்திற்கு அனுப்பப்பட்ட முதல் சீர்திருத்த கிறிஸ்தவ லண்டன் மிஷன் திருத்தொண்டர்கள் (First Protestant Missionaries to Salem) திருமதி. எலிசா ஸ்டெப்பி அம்மையார் அன்றைய சேலம் நகரில் முதன்முதலாக பெண் கல்வி முயற்சிகளுக்கு வித்திட்ட முன்னோடி என்ற பெருமைக்கு உரியவர். (Pioneer of Women's Education in Salem). சேலத்தின் முதல் பெண்களுக்கான பள்ளிக்கூடம் 1829ஆம் ஆண்டு திருமதி. எலிசா ஸ்டெப்பி அம்மையாரால் சேலம் மிஷன் வளாகத்தில் துவங்கப்பட்டது.சேலத்தின் கொடிய வெப்பம்,போதிய மருத்துவ வசதிகள் இல்லாத நிலைமைகளில் ,தனது இரண்டாவது பிள்ளைப் பேற்றில் அம்மையார் சேலத்தில் 7-5-1829ல் மரணமடைந்த போது அவருக்கு வயது 24. இவர்தான் சேலம் மண்ணில் விதைக்கப்பட்ட முதல் சீர்திருத்த கிறிஸ்தவ லண்டன் மிஷன் திருத்தொண்டர்.

**2. சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் (Rev.Henry Crisp.L.M.S.)**




சேலம் மிஷனுக்காக சங்கைஹென்றி கிறிஸ்பு ஐயர் சேலம் கோட்டைப் பகுதிக்கும், சேலம் செவ்வாய்ப் பேட்டைப் பகுதிக்கும் இடைப்பட்ட இடத்தில் பங்களாவுடன் கூடிய 30 ஏக்கர் நிலத்தை ரூபாய் 4,200க்கு வாங்கினது ஒரு மகத்தான துவக்கம். அன்றைய சேலம் நகரில் ஆங்கில அரசாங்கத்தின் உதவியுடன் 4 ஆரம்ப பாடசாலைகளை சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் முதன் முதலாக துவக்கி நடத்தி வந்தார். இதனால், சேலம் வரலாற்றில் சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் சேலம் ஆரம்ப கல்வியின் தந்தை என அழைக்கப்படுகிறார். (Father of Primary Education in Salem). சேலம் வந்து சேர்ந்த 4 மாத காலத்திலே சேலம் மிஷன் வளாகத்தில் பள்ளிக்கூட அறையில் சேலத்தின் முதல் சீர்திருத்த கிறிஸ்தவ ஞாயிறு ஆலய ஆராதனையை 3-2-1828 அன்று மாலை நடத்தி சாதித்தார். இதுவே சேலம் சீர்திருத்த கிறிஸ்தவ திருச்சபையின் பிறந்த நாள். 31-7-1831 அன்று சேலம் நகரின் முதல் தேவாலயத்தை சேலம் மிஷன் வளாகத்தில் கட்டிமுடித்து ஐயரின் மணிமுடிப்பான சாதனை. சேலத்தின் கொடிய வெப்பம் ஒத்துக் கொள்ளாததினால் தொடர்ந்து நோய்வாய்ப்பட்ட ஐயர் 28-10-1831 அன்று சேலத்தில் மரணமடைந்தார் அப்பொழுது அவருக்கு வயது 28.

**3. திருமதி.அன்னா வால்டன் (Mrs. Anna Walton. L.M.S.)**




லண்டன் மிஷனெரி சங்கத் திருத்தொண்டர் சங்கை ஜார்ஜ் வால்டன் ஐயரும், அவர் தம் துணைவியார் திருமதி.அன்னா வால்டன் அம்மையாரும் சங்கை ஹென்றி கிறிஸ்பு தம்பதியினருக்குப் பிறகு சேலத்தில் லண்டன் மிஷன் நிர்வாகப் பொறுப்பை சிறப்பாக ஏற்று நடத்தியவர்கள். திருமதி. அன்னா வால்டன் அம்மையார் சேலத்தில் பெண்கள் கல்வி,பெண்கள் மத்தியில் நற்செய்தி, மற்றும் பெண்கள் முன்னேற்றம் ஆகியவற்றை சிறப்புடன் கவனித்து வந்தார். சேலத்தின் கொடிய வெப்பம் ஒத்துக் கொள்ளாததினால் தொடர்ந்து நோய் வாய்ப்பட்ட திருமதி.வால்டன் அம்மையார் 28-8-1839ல் சேலத்தில் மரணமடைந்தார்;அப்பொழுது அவருக்கு 36 வயது.

**4. சங்கை ஜார்ஜ் வால்டன் ஐயர் (Rev.George Walton. L.M.S.)**

1832 ஆம் ஆண்டில் சேலம் மிஷன் வளாகத்தில் பெரியவர்களுக்கான கல்விச் சாலை (Adult School) மற்றும் தரும சாலை (Alms House) ஆகியவற்றை சங்கை ஜார்ஜ் வால்டன் ஐயர் முதன் முதலாகத் துவக்கினார். 1833 ஆம் ஆண்டு சேலத்தில் ஏற்பட்ட கொடிய பஞ்சத்தில் பாதிப்படைந்த ஏழைகளுக்கு உணவு வழங்கும் பணியை சேலம் மிஷன் வளாகத்தில் ஐயர் துவக்கி தொடர்ந்து நடத்தி வந்தார். புதியகிறிஸ்தவர்கள் பாதுகாப்புடன் கூடிவாழ ஒரு கிறிஸ்தவ குடியிருப்பை சேலம் மிஷன் வளாகத்தில் 1834ஆம் ஆண்டு சங்கை வால்டன் ஐயர் உருவாக்கினார். இதுதான் சேலம் நகரில் உருவான முதல் கிறிஸ்தவ குடியிருப்பு. 1840 ஆம்ஆண்டு உடல் நலக்குறைவால் பாதிப்படைந்த ஐயர் தனது பொறுப்புக்களை தனக்கு பின் வந்த சங்கை J.M.லெக்லர் ஐயரிடம் ஒப்படைத்தார். 1841 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 9ஆம் நாள்

சங்கை ஜார்ஜ் வால்டன் ஐயர் சேலத்தில் மரணமடைந்தார்; அப்பொழுது அவருக்கு வயது 39.

**5, செல்வன் ஹேன்ரிச் ஜார்ஜ் (Heinrich George)**

சேலத்தில் டேனிஸ் மிஷன் ஸ்தாபகர் (Danish Mission) மற்றும் முன்னோடி சங்கை கிறிஸ்டோப்பர் ஆக்ஸ் ஐயர் (Rev.Christopher Ochs) அவர்களின் 3 வயது மகன் சேலத்தில் இறந்தபொழுது அவன் சேலம் பழைய ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்தில் அடக்கம் செய்யப்பட்டான். சங்கை ஆக்ஸ் ஐயரின் மனைவி திருமதி.சாரா ஹேன்ட்ஸ் வால்டன் (Mrs. Sarah Hands Walton) என்பவர் சங்கை ஜார்ஜ் வால்டன் ஐயரின் மகள் ஆவார். சிறுவன் ஹேன்ரிச் ஜார்ஜ் சங்கை வால்டன் தம்பதியரின் பேரன். எனவே தனது தாத்தா பாட்டி கல்லறை அருகே அவன் அடக்கம் செய்யப்பட்டுள்ளான்.

**6, சங்கை ஸீ.ஜோசியா டெய்லர் ஐயர் (Rev. C.Josiah Taylor.C.M.S.)**

திருச்சபை மிஷனெரி சங்கத்தைச்(Church Missionary Society) சேர்ந்த திருத்தொண்டர் சங்கை C.ஜோசியா டெய்லர் ஐயர் பனைவடலி என்ற திருநெல்வேலி சீமைக்கு உட்பட்ட ஊரில் சமயப்பணி செய்துவந்தவர். அவர் சேலம் வந்திருந்தபோது திடீரென நோய்வாய்ப்பட்டு 5-4-1851 அன்று மரணமடைந்தார்; அப்பொழுது அவருக்கு 43 வயது. அவரது கல்லறை காணப்படவில்லை. சாசன கல்வெட்டு களவாடப்பட்டிருக்கலாம். வரலாற்று அறிஞர் H.லீ பானு தனது 'A Manual of the Salem District in the Presidency of Madras -Vol.1,The District, Madras,1883.'என்ற சேலம் வரலாற்று நூலில் (Page no.168)சங்கை ஜோசியா டெய்லர் ஐயரின் கல்லறையை 'Salem Cemetery' என்ற தலைப்பிலான அட்டவணையில் குறிப்பிட்டுள்ளார்.

**7, சங்கை ஹென்றி டோலர் ஐயர் (Rev. Henry Toller. L.M.S.)**

புதுமண தம்பதிகளாய் தென் இந்தியாவிலுள்ள சேலம் பகுதியில் லண்டன் மிஷனெரி சங்கத் திருத்தொண்டர்களாகப் பணிசெய்வதற்காக இங்கிலாந்து நாட்டில் இருந்து புறப்பட்டு ஒரு ஆறுமாத கால கப்பல் பயண முடிவில் சென்னைத் துறைமுகம் வந்து சேர்ந்த டோலர் தம்பதிகள், அங்கிருந்து கடின பயணமுடிவில் சேலம் வந்துசேர்ந்தனர். சேலத்தில் அவர்கள் மிஷனெரி பணிகளை மேற்கொண்டு செய்துவந்த நிலையில் 7 வார காலமுடிவில் திடீரென காலரா உயிர்க்கொல்லி நோய் தாக்கி சங்கை ஹென்றி டோலர் ஐயர் 15-3-1870 அன்று சேலத்தில் மரணமடைந்தார்; அப்பொழுது அவருக்கு 25 வயது. ஐயரின் மனைவி இளம் விதவையாக தாங்கள் வந்த அதே வியாபாரக் கப்பலில் தாய்நாட்டிற்குத் திரும்பிச் சென்றாராம். இப்படி ஒரு கொடுமை இவர்களுக்கு நேர்ந்தது ஏனோ?

**8, சங்கை அகஸ்டஸ் யோங்கர் ஐயர் (Rev.Augustus Younker.C.M.S.)**

திருச்சபை மிஷனெரி சங்கத்தைச் சேர்ந்த சங்கை யோங்கர் ஐயர் கடலூரிலே திருத்தொண்டராக பணியாற்றி வந்தார். இவர் சேலம் வந்திருந்தபோது திடீரென நோய்வாய்ப்பட்டு மரணமடைந்தார்.1875ஆம் ஆண்டு இவர் மரணமடைந்தார் என்று கல்லறை சாசன கல்வெட்டு அறிவிக்கிறது;அப்பொழுது அவருக்கு 61 வயது.SPCK மிஷன் ஊழியர்களான திரு.ஜான் யோங்கர் மற்றும் திருமதி.தெரசியா யோங்கர் ஆகியோரின் இளைய மகனான சங்கை அகஸ்டஸ் யோங்கர் ஐயர் சென்னை வேப்பேரி மிசியோன் அச்சுக்கூடத்தின் செயலாளராகவும் பதவி வகித்தவர்.





**முடிவுரை:**

சேலம் மண்ணில் குறிப்பாக சேலம் பழைய ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்தில் விதைக்கப்பட்ட திருத்தொண்டர்களாகிய இவர்கள் நமது விசுவாச நல்வாழ்விற்காக தங்களது நல்வாழ்வை தியாகம் செய்திருக்கிறார்கள்.நமது சுயமரியாதையுடன் கூடிய எதிர்கால வாழ்விற்காக தங்கள் நிகழ்காலத்தை அர்ப்பணித்திருக்கிறார்கள். அன்று அவர்களால் பாவ அடிமைத்தனத்தில் இருந்து மீட்கப்பட்ட நமது முன்னோர்களின் வழித்தோன்றல்களாக தன்மானமுள்ள சுதந்திர சமுதாயமாக தலைநிமிர்ந்து நாம் இன்று வாழ்கிறோம் என்றால் அதற்கு முழு முதற் காரணம் இன்று இந்த கல்லறைகளுக்குள் உறங்கும் கிறிஸ்தவ மிஷனெரிகளே !

'தூரம் திரிந்த சீயோனே! - உன்னை தூக்கி எடுத்து கரத்தினில் ஏந்தி! - ஆரங்கள் பூட்டி - அலங்கரித்து ! - உன்னை அத்தன் மணவாட்டி யாக்கினதும் என்னே!' - சங்கை வே.மாசிலாமணி ஐயர்.

ஆன்மீக அடிமைத்தனத்திலும்,சாதிக் கொடுமைகளுக்கு இலக்காகி,கிறிஸ்துவின் சத்தியத்திற்கு தூரமாகி, விலங்குகளிலும் கீழான நிலைமைகளில் சுற்றித்திரிந்த நம்மை அன்று தேடிவந்து சாதீய சாக்கடையிலிருந்து தூக்கி எடுத்து ,கல்வி,வேலை வாய்ப்பு போன்ற ஆரங்கள் பூட்டி ,நம்மை அலங்கரித்து ஆண்டவருக்கு மணவாட்டியாக நிறுத்தி அழகு பார்த்த மிஷனெரிகளின் உழைப்பை, ஊழியத்தை, தியாகத்தை நினைத்துப் பார்க்க. இன்று நாம் கடமைப் பட்டிருக்கிறோம்! இவர்களில் ஒருவருடைய தியாகமும், உழைப்பும் கூட மறக்கப்பட்டுவிடக்கூடாது.

கல்லறைகள் காலப்போக்கில் அழிக்கப்படலாம் ! சாசன கல்வெட்டுகள் களவாடப் படலாம்! ஆனால் இவர்களைப் பற்றிப் பேசும் வரலாறுகள் ஒருநாளும் அழிவதில்லை! சேலம் வந்த இந்த சிலுவை வீரர்களின் உழைப்பும்,தியாகமும், மறக்கப்பட்டோ,மறைக்கப்பட்டோ,மறுக்கப்பட்டோ,மாற்றப்பட்டோ,போய்விடக்கூடாது என்பதே எங்கள் எதிர்பார்ப்பும்,நோக்கமுமாக இருக்கிறது.இந்த எழுத்துக்கள் இவர்களைக் குறித்த தொடர் தேடலுக்கும்,ஆய்விற்கும், ஏற்ற தூண்டலாக,வழியாக, வாய்ப்பாக,விளங்கும் என்பதே எங்கள் நம்பிக்கை.

திருவிதாங்கூர் சமஸ்த்தானத்தில்
(தென்கேரள திருமண்டலமும், கன்னியாகுமரி திருமண்டலமும்)
சீர்திருத்தக் திருச்சபை உருவாக வித்திட்ட

அருள்திரு. இர்வின் ஞானமுத்து
தஞ்சாவூர்

# வேதமாணிக்கம் மகாராசன்

1

திருவிதாங்கூர் சமஸ்தானமான இன்றைய தென்கேரள திருமண்டலமும், கன்னியாகுமரி திருமண்டலமும், உருவாக வித்திட்டவர் வேதமாணிக்கம் மகாராசன் என்கிற தாழ்த்தப்பட்ட சமூகத்திலும் தாழ்த்தப்பட்ட வள்ளுவ இனத்தை சார்ந்தவர் ஆவார். ரிங்கிள்தோபே அருட்பணியாளரை இப்பகுதிக்கு அழைத்து வந்தவரும் இவரே.

**பிறப்பு;**

திருவாங்கூர் மகராசன் தமிழ்நாட்டிலுள்ள கன்னியாகுமரி மாவட்டத்தில் மயிலாடியில் 1750ல் பிறந்தார். அவரது தந்தை மற்றும் தாய்க்கு கிடைத்த சரியான பிறந்த தேதியைத் தவிர வேறு எந்த ஆதாரமும் இல்லை, அவரது மூதாதையர்கள் தஞ்சாவூரில் உள்ள நெல் வயல்களில் பயிர் செய்கிறார்கள். குடும்பம் பின்னர் திருநெல்வேலி மாவட்டத்தில் வல்லநாடு, கிழக்கு பாளையங்கோட்டைக்கு மாற்றப்பட்டது. அவர்கள் திருநெல்வேலியில் நான்கு தலைமுறைகளாக வாழ்ந்து, திருநெல்வேலியில் இருந்து மைலாடி வரை வாழ்ந்து வந்தனர், அங்கு மகராசன் வேதமாணிக்கம் பிறந்தார். இந்து மதம் சார்ந்த பழக்க வழக்கங்களில் இந்து மற்றும் மஹாராசான் வளர்க்கப்பட்டார். அவர் ஆன்மீக பக்தராக வளர்ந்து பல இந்து கோயில்களுக்கு சென்றார். கிராமத்தில் அவர் தனது அடிப்படை கல்வியை வெற்றிகரமாக கற்றுக்கொண்டார்.

**சிதம்பரம் நோக்கிய பயணம்:**

மகராசன், தன் இந்து ஆன்மீக பிம்பத்தினை தகவமைத்துக் கொண்டதின் நீட்சியே சிதம்பரம் நோக்கிய பயணமாகும். ஆனால், இப்பயணம் பக்தி பரவசம் ததும்பி, அதிலேயே மூழ்கிக் கரைந்து போவதற்காக அல்ல. மாறாக இந்துமதம் விளைவித்த ஏற்றத்தாழ்வு வெக்கைகளிலும், கசகசப்பிலும் இருந்து மீளத் தொடங்கிய பயணமாகும். மகராசனின் ஆன்மீக அலைச்சல் மக்களை முன்னுக்கு இறக்கி விட் உந்தப்பட்ட பயணமாகும். மகராசன் ஆன்மீக தன்னுணர்வில் தேடியது மனிதத்தின் உண்மையாக, பொருள்களை கொண்ட செயற் பாடுகளைத்தான். இந்துமதம் மனிதர்களை ஒட்டுமொத்தமாக சிறப்பு செய்யாமல், அதன் கடவுளர்கள் மக்கள் அனைவரையும் செல்லக் குழந்தையாக பாவிக்கவில்லையே எனும் ஆதங்கத்தால்தான்.

மகராசன், தன்னுடைய ஆதர்சமான சிவபெருமானை தரிசிக்க, இன்றைக்கு 220 ஆண்டுகளுக்கு முன், கி.பி. 1800 இல் சிதம்பரம் நோக்கி புறப்பட்டார். துணைக்கு தன்னுடைய தமயன் மகன் சிவகுருநாதனை அமர்த்திக் கொண்டார். 'அன்று சிதம்பரம் செல்வது எளிதான செயல் அன்று. இன்றுபோல் போக்குவரத்து வசதிகளோ, ஒழுங்கான பாதை வசதிகளோ, சாலையே இல்லாத அக்காலத்தில் காட்டு வழிகளில் கால்நடையாகவே நடந்து செல்ல வேண்டும். நெடுந்தூரம் பயணம் மேற்கொண்டவர்கள் திரும்பி வந்தால்தான் நிச்சயம். வரவில்லை என்றால் இறந்து விட்டார்கள் என்று கருதி இறுதிச் சடங்குகள் செய்து கொள்ள வேண்டும். இதுதான் அன்றைய நிலவரம்.

சமூக வன்முறை, வதை, தண்டனை, சதி, மனித அழிப்பு என வாதைகளின் நிகழ்களமாக விரிந்த திருவிதாங்கூரின் மீதான ஆழ்ந்த கசப்பினாலும், துயரத்தினாலும் ஏற்பட்ட பயணத்தில் மகராசனும், சிவகுருநாதனும் சிதம்பரம் நோக்கி நடந்து செல்லும் வழிகளில் மகராசனுக்கும், சிவகுருநாதனுக்கும் ஒருவித அச்சமும் அடங்கியிருந்தது. பை நிறையப் பணம் உண்டு. வழியில் கள்ளரும், மறவரும், கொள்ளையரும் உண்டு. எனவே மகராசனும் சிவகுருநாதனும் அவர்களிடமிருந்து தப்பிக்க ஒரு வழியைக் கையாண்டிருந்தனர். பயணிகள் இருவரும் இந்து பண்டாரவேடம் பூண்டிருந்தனர். காவி அணிந்து கமண்டலம் ஏந்திய சந்நியாசிகளின் தோற்றம் அவர்களின் பயணத்திற்கு பாதுகாப்பை தந்தது.

கோயில் நுழைவுப் போராட்டம் நடத்திய முதல் வீரராக நமக்குக் கிடைக்கும் பருண்மையான சான்று நந்தனார். நந்தனார், தில்லைக்கோவிலில் நுழைந்து நடராசனை வழிபட முயன்றபோது கொல்லப்பட்டவர். அன்றைக்கிருந்த பார்ப்பனியத்தின் மீள் வடிவங்களான பக்தி இயக்கங்கள் சைவமும் - வைணமும் நந்தனார் வரலாற்றை தங்களது நலனுக்கேற்பத் திரித்து சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டது.

மகராசனும், சிவகுருநாதனும் பல மாதங்கள் மாய்ந்து மாய்ந்து நடந்து வந்து சிதம்பரத்தை அடைந்தார்கள். மகராசனும் சிவகுருநாதனும் கொண்ட கோலமும், சூத்திர வேளாளர்கள் போல் இவர்கள் பெற்றிருந்த தோற்றமும் அவர்களை தீண்டத்தகாதவர்களாக எவரும் எண்ணிவிட முடியவில்லை.

சிவபெருமானின் தாண்டவத்தைவிட இங்கே தீட்சிதர்களின் தாண்டவம்தான் எக்கச்சக்கம் என்பது புரிந்துவிட்டது. மகராசன் கொண்ட ஆன்மீகத்தளத்தில் அவர் பற்றி நின்ற கடைசித் துரும்பான சிவபெருமான் நம்பிக்கை முழு ஏமாற்றத்தில் முடிந்தது. சிதம்பரம் கோவிலில் ஆன்மீகம் என்பது பெரிய பாசாங்காகவே பொய்முகங்களை காட்டி நின்றது. கோவிலின் உள்ளடக்கத்தை தீட்சிதர்களும், தேவதாசிகளுமே ஆக்ரமித்திருந்தார்கள். வைதீக மதத்தால் கீழ்மேலாகச் சீர்குலைக்கப்பட்ட திருவிதாங்கூர் சமூகத்தை சமத்துவமும் சமதர்மமும் நிலவுவதாக மீட்டெடுக்கும் மகராசனின் சிதம்பர ஆசை அணை உடைந்து ஏமாற்றமென அம்பலப்பட்டு நின்றது.

அவர் தூங்கிக்கொண்டிருந்தபோது, ஒரு மர்மமான கனவு இருந்தது. கனவில், ஒரு தூய வெள்ளை நிற ஆடை அணிந்த ஒரு மனிதன், ஒரு குச்சியை கொண்டு அடித்து, இங்கே தங்காதீர்கள் என்றார். இங்கு இருந்து தொலைந்து செல்; நீங்கள் இங்கே தங்க அனுமதி இல்லை. இது ஒரு புனித இடம் அல்ல. நீங்கள் தஞ்சாவூருக்குச் செல்ல வேண்டும், நீங்கள் ஒரு

உண்மையான கடவுளைக் காண்பீர்கள். கனவு மீண்ட மகராசனும் அதிர்ச்சியடைந்து திடீரென்று அவர் விழித்துக்கொண்டார். பின்னர் அவர்கள் தஞ்சாவூர் சென்றனர்,

**தஞ்சாவூர் நோக்கிய பயணம்:**

தஞ்சாவூரில் அங்கு மகராசனின் உறவினர்கள் வசிக்கின்றனர். அவர்கள் சனிக்கிழமை இரவு சிதம்பரத்தைவிட்டு, மகராசனும் சிவகுருநாதனும் தஞ்சாவூர் சென்று உறவினர்களின் இல்லத்தை அடைந்தார்கள். பண்டார வேடத்தில் சென்ற அவர்கள் தம்மை இன்னார் என்று அறிமுகம் செய்து கொண்டனர். உறவினர்கள் வியப்பும் மகிழ்வும் நிறைந்த நெஞ்சுடன் அவர்களை வரவேற்றனர். குடும்பச் செய்தியினைப் பகிர்ந்து கொண்டனர். சில நாட்கள் தங்களுடன் தங்கிச் செல்லுமாறு உறவினர் விரும்பி வேண்டினர். அந்த வேண்டுகோளை மகராசன் ஏற்றுக் கொண்டார். தஞ்சைத் தரணியில் அப்போது கிறிஸ்துவ சமயம் பரவியிருந்தது. “தஞ்சாவூர் மிஷன்” வாயிலாக நடைபெற்ற திருத்தொண்டின் காரணமாக பல ஆண்டுகளுக்கு முன்னரே திருச்சபைகள் பல நிறுவப்பட்டிருந்தன. பலர் கிறிஸ்துவர்களாகி புதிய வாழ்வும் புதிய வழி பாட்டு முறையும் பெற்று விளங்கினர். தஞ்சையிலுள்ள மகராசன் குடும்பத்தினரும் கிறிஸ்துவர்களாகயிருந்தனர். அவர்களுடன் தங்கி அவர்களின் புதிய வாழ்க்கை முறையையும் புதிய சமயத்தையும் பற்றிய சில உண்மைகளை அறியும் வாய்ப்பு மகராசனுக்குக் கிடைத்தது.

அன்று ஞாயிற்றுக்கிழமை. மகராசனின் உறவினர் ஆராதனைக்காக தூய பேதுரு ஆலயம் புறப்பட்டனர். தூய ஆடையணிந்து சில புத்தகங்களைக் கையில் எடுத்துக் கொண்டு அவர்கள் ஆலயம் சென்ற காட்சி மகராசனுக்குப் புதுமையாக இருந்தது. அவர்களைப் பின் தொடர்ந்து பண்டாரக் கோலத்தில் மகராசனும், சிவகுருநாதனும் சென்றனர். ஆலயத்தின் வெளியே நின்று, ஆராதனை முறையை உற்றுக் கவனித்தனர்.

அந்த தூய பேதுரு ஆலயத்தில் அன்று ஆராதனை நடத்தியவர் ஜே.சி. கோலப். ஆலயக் காட்சி, வழிபாட்டுக்காக வந்தோர் அமர்ந்திருந்த ஒழுங்கான முறை, இனிய தமிழ்ப் பாடல்கள் ஆகியவை மகராசனின் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தன. எத்தகையதொரு தொழுகை முறை அவரது இதயத்தில் இனந்தெரியாத முறையில் நிழலாடிக் கொண்டிருந்ததோ, அந்த நிழல் வடிவம் இப்போது கண்ணெதிரில் காட்சி வடிவம் கொண்டிருப்பதைக் கண்டு, வார்த்தைகளால் கூறமுடியாத களிப்பு அவர் நெஞ்சை நிறைத்தது. அனைத்திற்கும் மேலாக அன்று அருட்திரு கோலப் ஆற்றிய அருளுரை அவர்களுக்கென்று உரைக்கப் பட்டது போலவே அமைந்திருந்தது.

மகராசன் உள்ளத்தில் தோன்றி வளர்ந்து வந்த புது வகை உணர்வும், அதுபற்றி எழுந்த ஐயங்களும், அன்று அவர் கேட்ட அருளுரையால் தெளிவடைந்தன. அவர் உள்ளத்தில் எழுந்த வினாக்களுக்குப் பொருத்தமானவிடைகள் கிடைத்து விட்டன. மகராசன் பூரிப்பில் திளைத்தார். ஒரு கணம் மெய் மறந்து, கண்மூடி, களிப்பில் ஆழ்ந்து என்றும் இல்லாத புத்துணர்ச்சிக்கு ஆட்பட்டார்.

அருட்திரு கோலப் இறைமைந்தர் இயேசுநாதர், இவ்வுலகில் வாழ்ந்த வாழ்க்கையையும், ஆற்றிய அருள் மொழிகளையும் தெளிவாக விளக்கி, அவர் அடிச்சுவடுகளைப் பின்பற்றுவதுதான், ஆன்மீக விடுதலைக்கு மட்டுமல்ல உலகியல் விடுதலைக்கும் வழியாகும் என்னும் கருத்தை எளிய மொழியில் ஆற்றினார். அன்று கோலப் ஆற்றிய உரை தமது ஐயங்களுக்கு விளக்கம் அளிப்பதற்காகவே நிகழ்த்தப்பட்டதோ என எண்ணினார் மகராசன். இவ்வாறு புதுவகை உணர்வுகளில் அவர் மிதந்து கொண்டிருக்கையில் ஆலய ஆராதனையை முடித்துவிட்டு, கோலப் அவர்களை நோக்கி வந்தார். மகராசனை நெருங்கி, ‘நீங்கள் யார்? ஏன் இங்கு நிற்கின்றீர்கள்?’ என்று கேட்டார்.

தாம் மலையாள தேசமான திருவிதாங்கூரைச் சார்ந்தவர்கள் என்றும், இறைவனைத் தேடி சிதம்பரம் வந்ததாகவும், சிதம்பரச் காட்சியில் தம் சிந்தை நிறைவு பெறாத காரணத்தால் தஞ்சை வந்ததாகவும், தஞ்சை ஆலயத்தின் வழிபாட்டில் தாம் இரெண்டறக் கலந்து இறை உணர்வு பெற்றதாகவும், இறைவனைப் பற்றி தம் உள்ளத்தில் இருந்த அனைத்து வினாக்களுக்கும் அய்யரின் அருளுரையில் விடை கிடைத்து விட்டதாகவும், நிறைந்த நெஞ்சமுடன் இறைமாந்தர் இயேசுவை இரட்சகராக ஏற்றுக் கொண்டு கிறிஸ்து மார்க்கத்தில் சேர இருப்பதாகவும் கூறினார் மகராசன்.

கோலப், மகராசனின் வேண்டுகோளை முழுமையாக ஏற்றுக் கொள்ளவில்லை. “மெய்ஞானம்” என்னும் நூலை அவரிடம் கொடுத்து, அதைப்படித்து அதிலுள்ள செய்திகளை ஏற்றுக் கொள்வதென்றால் எட்டு நாட்களுக்குப் பின்னர் மீண்டும் தம்மை வந்து சந்திக்குமாறு கூறி அனுப்பினார். சிவகுருநாதனுடன், மகராசன் தம் உறவினர் வீட்டுக்குத் திரும்பினார்.

எட்டு நாட்களுக்குப் பின்னர் திரும்பி வருமாறு கோலப் கூறி அனுப்பினார். ஆனால் கொடுத்த நூலை ஆறே நாட்களுக்குள் அய்யந்திரியக் கற்றுத் தெளிந்த மகராசன் கோலப்பிடம் திரும்ப வந்து, கிறிஸ்துவின் போதனைகளைத் தாம் முழுமையாக ஏற்றுக் கொள்வதாகவும், தமக்கும் சிவகுருநாதனுக்கும் திருமுழுக்கு கொடுத்துத் தம்மை கிறிஸ்துவ சமயத்தில் சேர்த்துக் கொள்ளுமாறும் வேண்டினார். கோலப், மகராசனின் அறிவுத் திறனையும், நம்பிக்கைத் தெளிவையும் புரிந்து கொண்டார் என்றாலும், கிறிஸ்து சமயம் பற்றி மேலும் பல விளக்கங்களையும் தெளிவையும் உரையாடல் வாயிலாக உணர்த்தினார். புதிய ஏற்பாடு உட்பட வேறு சில நூல்களையும் கொடுத்தார். கோலப்பின் விளக்கங்களைக் கேட்டபோதும், அவர் கொடுத்த நூல்களைக் கற்றபோதும், தம் நெஞ்சில் இருந்த கனல், பற்றி எரிந்து சுடர்விட்டு ஒளிர்ந்ததாக மகராசன் பின்னர் குறிப்பிட்டுள்ளார்.

மகராசனின் உணர்வுகளைத் தெளிவாகப் புரிந்துகொண்ட கோலப், அவருக்கு ஞானஸ்நானம் கொடுத்து கிறிஸ்துவ சமயத்தில் சேர்த்துக் கொள்ள ஒப்புக் கொண்டார். மகராசனுக்கு “வேதமாணிக்கம்” என்றும், அவர் தம்முடன் அழைத்துச் சென்ற தமையள் மகனான சிவ குருநாதனுக்கு “மாசிலாமணி” என்றும் புதிய பெயர்களைச் சூட்டி ஞானஸ்நானம் கொடுத்து கிறிஸ்துவர்களாக்கினார். மனம் மாறிய மகராசன் பெயர் மட்டுமல்ல, உடைமாற்றமும் பெற்று புதிய உள்ளம், புதிய பெயர், புதிய தோற்றம் ஆகியவற்றால் “மாற்றுரு” அடைந்தார்.

# தூத்துக்குடி கால்டுவெல் மேல்நிலைப்பள்ளி

அருள்திரு.முனைவர் ச.இராஜசேகரன்
கீதா நகர்

## ஆரம்ப கால வரலாறு

தூத்துக்குடி மீன்பிடிக்கும் கடற்கரை கிராமம். பெரும்பாலான மக்கள் மீன்பிடிக்கும் தொழிலை செய்து வந்தனர். உயர் ஜாதி இந்துக்கள் மிகக் குறைவாக இருந்தனர். 1542ம் ஆண்டு தூய பிரான்சிஸ் சேவியர் தூத்துக்குடியில் கிறிஸ்துவின் நற்செய்தியை அறிவித்தார். மீன்பிடிக்கிற மக்கள் கிறிஸ்தவர்களானார்கள். அதைத் தொடர்ந்து தூய இக்னேசியஸ் லையோலாவால் ஆரம்பிக்கப்பட்ட இயேசு சங்கத்தார் தூத்துக்குடியில் தங்கி மக்களுக்கு கிறிஸ்தவ போதனையை போதித்து திருமுழுக்கு கொடுத்தார்கள். ஒரு ஆலயத்தையும் கட்டினார்கள்.

1654ம் ஆண்டு தூத்துக்குடிக்கு டச்சுக்காரர்கள் வியாபாரத்திற்கு வந்தார்கள். அவர்கள் சீர்திருத்த கிறிஸ்தவர்கள் (Protestant), இவர்கள் கிறிஸ்துவை வழிபடுவதற்கென்று 1750ம் ஆண்டு தங்களுக்கென்று ஒரு ஆலயத்தைக் கட்டினார்கள் (இது பழைய துறைமுகத்திற்கு எதிராக இன்றும் இருக்கிற தூய திரித்துவ ஆலயம்). தூத்துக்குடியிலிருந்த டச்சு கவர்னரின் (ஆளுநர்) வேண்டுகோளின்படி தரங்கம்பாடி மிஷனெரிகள் ராயப்பன் என்பவரை கிறிஸ்துவின் நற்செய்தியை அறிவிக்கும்படி தூத்துக்குடிக்கு அனுப்பினார்கள். மேலும் SPCK மிஷனெரி சுவார்ட்ஸ் ஐயர் தான் திருநெல்வேலிக்கு அனுப்பியிருந்த சத்தியநாதன் உபதேசியாரையும் தூத்துக்குடிக்கு அனுப்பப்பட்ட ராயப்பனுடன் சேர்ந்து கிறிஸ்துவின் நற்செய்தியை அறிவிக்கும்படி அனுப்பினார். இதன் பயனாக 8.6.1789ம் ஆண்டு 46 பேர் தூத்துக்குடியில் திருமுழுக்கு பெற்றார்கள். மேலும் சில மாதங்கள் கழித்து 226 பேர் திருமுழுக்கு பெற்றார்கள். இதில் ரோமன் மார்க்க கிறிஸ்தவர்கள்தான் அதிகமாக திருமுழுக்கு எடுத்தவர்கள்.

ராயப்பன் உபதேசியாரும் சத்தியநாதன் உபதேசியாரும் சேர்ந்து தூத்துக்குடியில் முதல் பள்ளிக்கூடத்தை 1789ம் ஆண்டு ஆரம்பித்தார்கள். தாவீது ஆராய்ச்சி என்பவர் முதல் ஆசிரியராகப் பணி செய்தார். கத்தோலிக்க மக்களின் எதிர்ப்பினால் இந்தப் பள்ளி அதிக காலம் இயங்க முடியாமல் மூடப்பட்டது.

1801ம் ஆண்டு திருநெல்வேலி பிரிட்டிஷ் ஆளுகைக்குட்பட்டது (தூத்துக்குடி டச்சு மக்கள் ஆளுகைக்குள் தொடர்ந்து இருந்தது. 1829ம் ஆண்டு பிரிட்டிஷ் ஆளுகைக்கு வந்தது.) 1816ம் ஆண்டு கிழக்கிந்திய கம்பெனி மத குருவாக அருள்திரு. ஜேம்ஸ் ஹாப் ஐயர் பாளையங்கோட்டையில் பணி செய்தார். இவர் கிறிஸ்துவின் நற்செய்தியை ஓய்வு நேரங்களில் எல்லாம் அன்றைய திருநெல்வேலி மாவட்டம் முழுவதும் சென்று அறிவித்தார். அப்பொழுது திருநெல்வேலி மாவட்டத்திலிருந்த 63 சபைகளை சந்தித்து மக்களுக்கு கிறிஸ்தவ போதனை கொடுத்தார். மக்களுக்கு திருமுழுக்கு கொடுத்தார். இந்தக் காலக்கட்டத்தில் தூத்துக்குடியில் சீர்திருத்த சபை கிறிஸ்தவர்கள் ஒருவரும் இல்லை. 1789ம் ஆண்டு ஞானஸ்நானம் எடுத்த அனைவரும் ரோமன் கத்தோலிக்க மார்க்கத்திற்கே சென்று விட்டனர்.

ஜேம்ஸ் ஹாப் ஐயர் 1819ம் ஆண்டு தூத்துக்குடிக்கு வந்து ஒரு பள்ளிக்கூடத்தை ஆரம்பித்து சீர்திருத்த சபை கிறிஸ்தவரை ஆசிரியராக நியமித்தார். ஆனால் கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் ஒன்று சேர்ந்து அவரை எதிர்த்து கூக்குரலிட்டு ஓட ஓட விரட்டினர். அதனால் ஜேம்ஸ் ஹாப் ஐயர் பள்ளிக்கு ஒரு இந்து ஆசிரியரை நியமித்தார். ஆனால் அதற்கும் எதிர்ப்பு குரல் எழும்பவே பள்ளி சரியாக இயங்க முடியாமல் அவ்வருடமே பள்ளி மூடப்பட்டது.

1829ம் ஆண்டு தூத்துக்குடி பிரிட்டிஷ் ஆளுகைக்கு உட்பட்டது. இதனால் அதிகமான ஐரோப்பியர்கள் தூத்துக்குடியில் தங்கினார்கள். 1854ம் ஆண்டு தூத்துக்குடி ஏற்றுமதி இறக்குமதி வசதியுள்ள துறைமுகமாக மாறியது. கடல் பயணமாக மக்கள் ராமநாதபுரம், பாம்பன், யாழ்ப்பாணம், கொழும்பு போன்ற பகுதிகளுக்குச் செல்ல முடிந்தது. நீராவிக் கப்பல் மூலமாக தூத்துக்குடி கொழும்புக்கிடையே கப்பல் பயணம் நடைபெற்றது. ஏற்றுமதி, இறக்குமதி வியாபாரம் பெருகியது. வியாபாரத்தின் நிமித்தம் திருநெல்வேலி மாவட்டத்தின் பல்வேறு கிராமங்களிலிருந்து மக்கள் தூத்துக்குடியில் குடியேறினர். அப்படி குடியேறியவர்களில் சீர்திருத்த சபை கிறிஸ்தவர்களும் சிலர் இருந்தனர்.

புதுக்கோட்டையில் மிஷனெரியாக 1856ம் ஆண்டு இருந்த அருள்திரு. ரிச்சர்ட் S.போப் அவர்கள் (டாக்டர். அருள்திரு. ஜி.யு. போப் அவர்களின் தம்பி) தூத்துக்குடியில் சீர்திருத்த திருச்சபையைச் சேர்ந்த கிறிஸ்தவர்கள் 6 பேர் இருந்தனர். அவர்கள் அனைவரும் ஒரே சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் (நாடார்) என்று தன் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார். அவர்கள் வாழ்ந்த இடம் தான் பின்பு வடக்கூர் என்று அழைக்கப்பட்டது. அன்றைய காலத்தில் ரிச்சர்ட் போப் தூத்துக்குடிக்கு பள்ளிக்கூடம் தேவையில்லை என்று எண்ணினார். ஆனால் தூத்துக்குடியில் குடியேறிய ஐரோப்பியர்களும் தூத்துக்குடியிலிருந்த உயர்குடி மக்களும் தங்கள் பிள்ளைகள் படிப்பதற்கு ஒரு பள்ளிக்கூடம் அவசியம் என்று எண்ணி பள்ளிக்கூடம் ஆரம்பிப்பதற்கு தேவையான முயற்சிகள் எடுத்தனர். தங்களுக்குள் பணம் பிரித்து அவர்கள் வாழ்ந்த இடத்தின் அருகே அரசாங்கத்திடம் ஒரு நிலத்தை வாங்கி 1857ம் ஆண்டின் தொடக்கத்தில் ஆங்கிலோ வெர்னக்குலர் பள்ளியை (Anglo vernacular School) ஆரம்பித்து திரு. கிராம்டன் (Mr. Crampton) என்பவரை தலைமை ஆசிரியராக நியமித்தனர்.

ஐரோப்பியர்களால் தூத்துக்குடியில் உள்ள பள்ளியை தொடர்ந்து நடத்த முடியாத காரணத்தால் அதை SPG சபைக்கு கொடுக்க முடிவு செய்தனர். நாசரேத்தில் உள்ள அருள்திரு. தாமஸ் பிரதர்டன் ஐயரை அனுகினர். பிரதர்டன் ஐயர் தூத்துக்குடிக்கு 1858ம் ஆண்டு நவம்பர் மாதம் 25ம் தேதி வந்தார். பள்ளியைப் பற்றி திருநெல்வேலி மாகாணக் கமிட்டிக்கு எழுதினார். தமது குறிப்பில், ஐரோப்பியர், உயர்குடி மக்களால் பள்ளி உருவாக்கப்பட்டதென்றும் நல்லமுறையில் பள்ளி வளர்ந்து வருவதைப் பற்றியும் வேத அறிவில்

சிறந்து விளங்குவதைப் பற்றியும் எழுதி அனுப்பினார். திரு. கிராம்டன் வேப்பேரி இலக்கணப் பள்ளியில் மாணவராயிருந்தவர். எனவே பிள்ளைகளுக்கு வேத அறிவைப் புகட்டுவதில் சிறந்து விளங்கினார். சனிக்கிழமை காலை முழுவதும் வேத அறிவுக்கென்றே ஒதுக்கப்பட்டது.

மிகச்சிறந்த பயனுள்ள ஒரு பள்ளி என சங்கத்தாரால் பரிந்துரைக்கப்பட்டது. பள்ளியின் பராமரிப்புக்காக MDC (Madras District Committee) 3.1.1861ம் ஆண்டு ரூ.220 கொடுத்தது. பள்ளி 5ம் வகுப்பு வரை தரம் உயர்த்தப்பட்டது. பள்ளியில் 4ம் வகுப்பில் ஆங்கில மொழி கற்றுக் கொடுக்கப்பட்டது (தமிழ்வழி கல்வி கற்பவர்களுக்கு.)

பள்ளி மிகச் சிறந்த முறையில் செயல்பட்டது. 1867ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 30ம் தேதி பள்ளியைப் பார்வையிட்ட அருள்திரு. J.F. கோர்ன்ஸ் ஐயரவர்கள் பள்ளியின் சிறப்பை அறிந்து பாராட்டினார். சம்பளம் முறையாக அளிப்பதற்கு ஏற்பாடுகளைச் செய்தார். சென்னைப்பேராயர் 1866ம் ஆண்டும் 1869ம் ஆண்டும் இரண்டுமுறை தூத்துக்குடிக்கு வந்தார் அப்பொழுது பள்ளியை பார்வையிட்டார் . A.V. பள்ளிக்கூடத்தை பார்வையிட்டு பள்ளியின் செயல்பாட்டை பாராட்டினார். 1870ம் ஆண்டு 80 மாணவர்கள் கல்வி பயின்றார்கள். அரசு உதவித் தொகையாக (Government Aid) ரூ.200 கொடுத்தது. MDC யின் செயலர் சீமன்ட்ஸ் (A.R.Symonds) அவர்கள் தூத்துகுடிக்கு வந்து பள்ளியைப் பார்வையிட்டு பாராட்டினார்கள். 30.9.1871-ல் பள்ளிக்கு அரசின் உதவித் தொகை 250 ரூபாயாக கூடியது.

சாயர்புரத்தில் SPG மிஷனெரியாக இருந்த ஜி.யு. போப் ஐயர் சாயர்புரத்தில் செமினெரி என்ற ஒரு கல்வி நிறுவனத்தை ஆரம்பித்தார் (1844). அதில் ஆங்கிலம், கிரேக்கு, இலத்தீன், எபிரேயம், தமிழ் மொழிகளையும், உயர்கணிதம், தத்துவம், கடவுளியல் முதலியனவற்றை கற்பித்து சிலரை ஆசிரியராகவும், சிலரை உபதேசிமாராகவும் பயிற்றுவித்து மேம்பாடுகள் மிக்க கல்விப்பணியை நிறைவேற்றினார். சாயர்புரம் செமினெரித் தலைவர் J. எர்ண்ஷா (1859-64). 1861ம் ஆண்டில் செமினெரியை ஓர் உயர்நிலைப்பள்ளியாக உயர்த்தி 1862ம் ஆண்டு முதல் சென்னை மெட்ரிக்குலேசன் பள்ளி தேர்வுக்கு மாணவர்களை அனுப்பினார்.

அருள்திரு. டாக்டர். J.M. ஸ்ட்ரான் ஐயர் M.D.C. செயலராக பதவியேற்று (1876) கிறிஸ்தவர்களுக்கு கல்லூரிப் படிப்பு கிடைக்க வாய்ப்புகள் ஏற்படுவது பற்றி அக்கமிட்டியில் ஆலோசனை செய்தார். கமிட்டியினர் அவருடைய கருத்தை ஏற்றுக்கொள்ளவே அவர் பேராயர் கால்டுவெலுக்கு ஏதாவது ஒரு உயர்நிலைப்பள்ளியை கல்லூரியாக உயர்த்தும்படி எழுதினார் . அந்நாட்களில் பேராயர் கால்டுவெல் சாயர்புரம் உயர்நிலைப்பள்ளியை கல்லூரியாக உயர்த்த எண்ணினார். சாயர்புரம் உயர்நிலைப்பள்ளியின் தலைவராயிருந்த ஆதம்ஸன் ஐயர், ஷாராக் ஐயர் முதலானவர்கள் பேராயரின் கருத்தை ஆமோதிக்கவே 1880ம் ஆண்டு சாயர்புரம் உயர்நிலைப்பள்ளி சாயர்புரம் SPG கல்லூரியாக உயர்த்தப்பட்டது. அதன் முதல் முதல்வர் ஆதம்ஸன் ஐயர். சாயர்புரத்தில் கல்லூரி ஆரம்பித்ததில் மார்காஷிஸ் ஐயருக்கு உடன்பாடு இல்லை. சாயர்புரத்திற்கு முதலிடம் கொடுக்க அவர் விரும்பவில்லை. 1882ம் ஆண்டு சாயர்புரம் SPG கல்லூரியின் முதல்வராக ஷாராக் ஐயர் பொறுப்பெடுத்தார்.

தேசமே, பயப்படாதே, மகிழ்ந்து களிகூரு; கர்த்தர் பெரிய காரியங்களைச் செய்வார். யோவேல் 2:21

# சட்டத்தை அறிந்து சுதந்திரமாக சத்தியத்தை அறியுங்கள்


**ID. KING PAUL .MD**

**SOLAMIO ENTERPRISES**

**# 7. Ideal city Periyapalyam,**

**Uthukottai, Thiruvallur**

**Tamilnadu - 601102.**

solamio777@gmail.com

Mobile: +91 9751020106

9790000275

9790591747


**கிறிஸ்தவர்களுக்கு மற்றும் கிராம ஊழியர்களுக்கு சுவிசேஷத்தின் நிமித்தம் வருகின்ற எல்லா பிரச்சனைகளுக்கும் இந்திய அரசியலமைப்புச் சட்டம் தரும் பாதுகாப்பு குறித்து விரிவான விளக்கங்களையும் ஆலோசனைகளையும் பெற்றுக்கொள்ளவும் மற்றும் சிறுபான்மையினர் நலத்துறையின் மூலமாக திருச்சபை மக்களுக்கும் ஊழியர்களுக்கும் கிடைக்கும் நலத்திட்டங்களையும் குறித்து தெளிவாக இலவசமாக தெரிந்து கொள்ளவும் எங்களை தொடர்பு கொள்ளுங்கள்.**

பிரிவு -295 வழிபாட்டுக்குரிய ஓர் இடம், பொருள் : மதச்சார்புடையவர்களின் மனதை, மதவுணர்வுகளை புண்படுத்தும் என்று தெரிந்திருந்தும், அழிப்பது, பின்னப்படுத்துவது, அசுத்தப்படுத்துவது குற்றமாகும். தண்டனை: இரண்டு ஆண்டுகள் வரை சிறைக்காவல் அல்லது அபராதம் அல்லது இரண்டும் தண்டனையாக விதிக்கப்படும்.

பிரிவு - 295 (A) மத உணர்ச்சிகளை புண்படுத்த வேண்டும் என்ற கெட்ட எண்ணத்துடன், வேண்மென்றே பேச்சாலோ, எழுத்தாலோ, ஜாடையாகவோ ஒரு மதத்தை, மத உணர்வுகளைப் புண்படுத்துவதும், முயற்சி செய்வதும் குற்றமாகும். தண்டனை : மூன்று ஆண்டுகள் வரை சிறைக்காவல் அல்லது அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும்.

பிரிவு - 296: மத வழிபாடு, மதச் சடங்கு செய்வதற்குக் கூடியிருக்கும் கூட்டத்தில் அமைதியை குலைக்க செய்யப்படும் செயல் குற்றமாகும். - தண்டனை: ஓர் ஆண்டு வரை சிறைக்காவல் அல்லது அபராதம் அல்லது இரண்டும் தண்டனையாக விதிக்கப்படும்.

பிரிவு - 297 "வழிபாட்டிடங்கள், இடுகாடு, சுடுகாடு, அந்திமக் கிரியைகள் செய்யும் இடம், இறந்தவரின் அஸ்தி வைக்கப்பட்டுள்ள இடம் ஆகிய இடங்களில் தனிமனிதனின் உணர்வுகளை புண்படுத்த வேண்டும் என்ற எண்ணத்துடன் பிறருடைய உணர்வுகளுக்கு அல்லது மதத்திற்கு இழிவு உண்டாகும் என தெரிந்திருந்தும் அத்துமீறி நுழைவது குற்றமாகும்.
இறந்தவரின் சடலத்திற்கு அவமதிப்பை உண்டாக்க கூடிய எத்தகைய செயலும் குற்றமாகும். தண்டனை: ஓர் ஆண்டு வரை சிறைக்காவல் அல்லது அபராதம் அல்லது இரண்டும் தண்டனையாக விதிக்கப்படும்.

பிரிவு - 298: ஒரு நபரின் மத உணர்வுகளை புண்படுத்தும் வகையில் அந்த நபரின் காதில் படும்படியாக ஒரு சொல்லை உபயோகித்தாலும், ஒலியை உண்டாக்கினாலும், ஜாடைக் காட்டினாலும், ஒரு பொருளை வைத்தாலும் குற்றமாகும் தண்டனை: ஓர் ஆண்டு வரை சிறைக்காவல் அல்லது அபராதம் அல்லது இரண்டும் தண்டனையாக விதிக்கப்படும்.

**இந்திய அரசியல் அமைப்பு சட்டங்கள்**

**CONSTITUTION OF INDIA**